# ஜூபிடரின்

# வேலைக்காரி

பிப்ரவரி 25 முதல்

எம்.வி.ராஜம்மா
வி.என்.ஜானகி
கே.ஆர். ராமஸ்வாமி
டி.எஸ்.பாலையா
எம்.என். நம்பியார்
டி.பாலசுப்ரமணியம்
புளிமூட்டை · நடிக்கது
நடனம்: லலிதா-பத்மினி

கதை வசனம்:
ஸி.என். அண்ணாதுரை
டைரக்ஷன்:
ஏ.எஸ்.ஏ.சாமி
பாடல்கள்:
உடுமலை நாராயண கவி

பெங்களூர் ........ ஸுப்பர் · ஸ்ரீ
திருச்சி ........ ஸ்டார்
கோயமுத்தூர் ........ கர்னாடிக்
சேலம் ........ ராஜா
கும்பகோணம் ........ சுந்தரம்
மாயவரம் ........ நடராஜா
காரைக்குடி ........ [illegible]
வேலூர் ........ முத்தையா
திருப்பாப்புலியூர் ........ கிருஷ்ணா
சிதம்பரம் ........ ரதி
புதுச்சேரி ........ அழகப்பா
நாகர்கோயில் ........ லெக்ஷ்மி
கொல்லம் ........ ஜாஸ்
திருச்சூர் ........ [illegible]
செங்கோட்டை ........

கூடிய சீக்கிரம் வெளிவரும்
[illegible]
...மதராஸ்...

ஸ்டூடியோ · செண்டரல்

... AFTER THAT I'M CONVINCED

*Tussanol*

IS THE

ONLY WAY



பரீட்சைகள் செய்வது நேரத்துக்கும் பணத்துக்கும் வீண் செலவுதான். எப்போதுமே நிச்சயமாக குணத்தை யளிக்கும் "டஸனல்" உபயோகித்து ஜலதோஷம் இருமலினின்றும் மிக எளிதில் சௌகரியமடைந்த அநேகம் பேர்களின் புத்திமதியையே நீங்களும் மேற்கொள்ளுங்கள்.




# TUSSANOL

*For* COUGHS

MARTIN & HARRIS LTD., CALCUTTA




யாவரும் விருப்புடன் தேர்ந்தெடுத்து வாங்கும் சிறந்த சமையல் சாதனம். பதார்த்தங்களின் சுவையையும், மணத்தையும் பன்மடங்கு பரிமளிக்கச் செய்கிறது. சுத்தமான தாவர எண்ணெயில் சாஸ்திரிய முறையில் தயாரிக்கப்பட்டு வீட்டுத் தேவைக்காக காற்றுப் புகாத லீவர் மூடியுடன், 2, 5 பவுண்ட் டின்களில் எல்லா முக்கிய வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

# காமதேனு
## வனஸ்பதி

தயாரிப்பவர்கள்:

**மேட்டூர் கெமிகல் & இன்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்**

மேட்டூர் அணை - சேலம்

மானேஜிங் ஏஜென்ட்ஸ்:

**சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட்**

திருச்சிராப்பள்ளி

பூரண விற்பனை ஏஜென்டுகள்:

**அலைட் இன்டஸ்ட்ரியல் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் லிமிடெட்**

120, அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்






# பிரசித்தமான இரண்டு பெயர்கள்

# APL

## பிணைக்கப் பட்டுள்ளன...



1949 ஜனவரி முதல் தேதியிலிருந்து புகழ்பெற்ற பெயிலார்ட் சப் ஸ்டாண்டர்டு சினிமா கேமிராக்களுக்கும், புரொஜெக்டர்களுக்கும், இந்திய யூனியனின் சோல் ஏஜண்டுகளாக நாங்கள் நியமிக்கப் பட்டுள்ளோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். கூடிய சீக்கிரம் ஏ. பி. எல்- டீலர்களிடம் ஸ்டாக்குகள் கிடைக்கும். வியாபார விசாரணைகளுக்குக் கீழ்க் கண்ட விலாசத்திலுள்ள ஏதேனும் ஒரு ஆபீஸுக்கு எழுதவும்.

அல்லைட்
போட்டோகிராபிக்ஸ்
லிமிடெட்

பம்பாய்: 193, ஹார்ன்பிரோடு; கல்கத்தா: 22, பால்லிகஞ்ச் பார்க்; மதராஸ்: 16, அரண்மனைக்காரத் தெரு



# இந்த சவாரியின் அற்புதத்தை உணருங்கள்
## லக்ஷக்கணக்கானவர்கள் இதை அனுபவிக்கின்றனர்!




இந்த புதிய சூபர்—குஷன்—புதிய மாடல் கார்களில்—எந்த மாடல் காரின் உபயோகத்துக்கும் திருப்திகரமான முறையில் சேவை செய்கிறது.

பெரியது அல்லாமல் மிருதுவானது. அதிக காற்றை உட்கொள்ளும் சக்தி வாய்ந்தது—, மேலும் 24 பவுண்டு காற்று அழுத்தத்திலேயே ஓடுவது.

சூபர் - குஷன் உங்கள் காரில் பொருத்தப்பட்டால் அதன் பலன்கள் :

- எவ்வித ரஸ்தாவிலும் மிருதுவான ஓட்டம்
- இறுகப் பிடிப்பு — மேலும் பத்திரம்
- உங்கள் வண்டியின் தேய்மானமும் குறைவு
- சப்தமும் பழுதுச் செலவும் மிகக் குறைவு
- அதிக மைலேஜுடன் சிக்கனமும்கூட
- வெடிப்புகளைத் தவிர்க்க அதிக எதிர்ப்பு

The new

*Super-Cushion*

by GOODYEAR

உலக முழுவதும் ஏராளமான ஜனங்கள் வேறெந்த டயரையும்விட குட்இயர் டயர்களையே அதிகம் உபயோகிக்கின்றனர்.

GC-7

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 8 இதழ் 31 | பிப்ரவரி 27 | சர்வதாரி ௵ மாசி 16




மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 31

# என்ன சேதி?

## நாலா? மூன்றா?

எத்தனை வருஷம் வேண்டும்? நாலா அல்லது மூன்றா? இந்தப் பிரச்னை சென்னைச் சர்வ கலாசாலை அகாடமிக் கவுன்ஸிலில் விவாதத்துக்கு வந்தது.

பி. ஈ. பட்டம் அளிக்கும் சென்னை இஞ்ஜினீரிங் கல்லூரிப் படிப்பின் கால அளவு இப்போது நாலு வருஷமாக இருந்து வருகிறது. சென்னை சர்க்காரின் தொழில் கல்வி ஆலோசனை போர்டார் அதை மூன்று வருஷமாகக் குறைக்கலாம் என்று சிபார்சு செய்திருந்தனர். சர்வ கலாசாலை இஞ்சினீரிங் கல்வி போர்டாரும் அந்த ஆலோசனையைப் பரிசீலனை செய்து அவ்வாறே இஞ்சினீரிங் படிப்பின் கால அளவை மூன்று வருஷமாகக் குறைப்பதென்று தீர்மானித்தனர். மேற்படி தீர்மானத்துக்கு அநுசரணையாக அவசியமான விதிகளையும் பாட அட்டவணைகளையும் தயாரித்தனர்.

இஞ்ஜினீரிங் கல்லூரி பிரின்ஸிபால் லெப்டினன்ட் கர்னல் எஸ். பால் அவர்களும் அவ்விதம் குறைப்பதில் எத்தனையோ நன்மைகள் இருக்கின்றன என்று கூறினார். "இப்போது அனாவசியமான பல விஷயங்கள் மாணவர்களுக்குப் போதிக்கப்படுகின்றன. அவற்றைத் தள்ளிவிட்டுப் பிரயோஜனகரமான விஷயங்களை மாத்திரமே போதிப்பது என்று ஏற்படுமாயின் கால அளவைக் குறைப்பதில் சிறிதும் கஷ்டம் இராது" என்று ஸ்ரீ பால் விவரித்தார். இஞ்ஜினீரிங் மாணவர்களுக்கு, கல்லூரிக் கல்வியைக் காட்டிலும் வெளியில் பெறும் அநுபவ பாடம் முக்கியமானது என்றும் குறிப்பிட்டார்.

## இது என்ன பீடம்?

ஆனால், இதெல்லாவற்றையும் கேட்ட அகாடமிக் கவுன்ஸில் நாலு வருஷ இஞ்ஜினீரிங் கல்வியை மூன்று வருஷமாகக் குறைக்கக்கூடாது என்று முடிவு செய்து விட்டது. இவ்வாறு முடிவு செய்த காரணம் என்ன தெரியுமா? எல்லா சர்வகலாசாலைகளிலும் இஞ்ஜினீரிங் படிப்பின் கால அளவு ஒரே மாதிரியாக இருக்க வேண்டுமாம். அதாவது எல்லாரும் குட்டிச்சுவரில் முட்டிக்கொள்ளும் போது நாம் மாத்திரம் ஏன் வேறு பாதையில் செல்ல வேண்டும் என்பது அகாடமிக் கவுன்ஸில் பிரகஸ்பதிகளின் வாதம்! ஞான மார்க்கத்தைப் போதிக்க சாரதா பீடம், சரஸ்வதி பீடம், காமகோடி பீடம் என்றெல்லாம் இருக்கின்றன அல்லவா? அதைப் போல நமது சென்னை சர்வகலாசாலை அகாடமிக் கவுன்ஸிலை அஞ்ஞானபீடம் என்று அழைப்பது மிகப் பொருத்தமாக இருக்கும்!

## சொல்லும் செயலும்

"இந்தியாவும் பாகிஸ்தானும் தோளோடு தோள் நிற்க வேண்டும்" என்று பாகிஸ்தான் பிரதம மந்திரி ஜனாப் லியாகத் அலிகான் கூறுகிறார். இதைத்தான் இந்தியாவின் தலைவர்கள் ஆதிமுதல் சொல்லி வருகிறார்கள். அவர்கள் தாங்கள் சொல்லுவதைச் செயலிலும் காட்டியிருப்பதற்கு எத்தனையோ உதாரணங்கள் கூற முடியும். நமது அருமைத் தலைவர்களை நாக்கில் நரம்பின்றித் தூற்றும் பாகிஸ்தான் பத்திரிகைகளுக்கு விதித்திருந்த தடையைக் கூட இந்திய சர்க்கார் ரத்து செய்து விட்டனர்.

ஆனால், இந்தியாவின் நட்பை நாடுவதாகச் சொல்லும் பாகிஸ்தான் தலைவர்கள் செய்வது எப்படியிருக்கிறது? இந்தியர் மாத்திரமல்ல, பாகிஸ்தானியர் உள்பட உலக மக்கள் யாவரும் போற்றும் உத்தமரின் சிலைக்குப் பூமாலை சூட்டுவதைத் தடுக்கின்றனர்! தீர்ந்து போன ஜுனாகாத், ஹைதராபாத் பிரச்னைகளை பொட்டி இன்னும் ஏதாவது விஷமம் செய்து கொண்டுதான் இருக்கிறார்கள். ஆனால், இந்தியாவின் உண்மையான நட்பு பாகிஸ்தானுக்குக் கிடைக்க வேண்டுமாயின், அதன் தலைவர்கள் சொல்வது ஒன்று, செய்வது ஒன்று என்ற விபரீதமான போக்கை மாற்றிக் கொள்ள வேண்டும்.

# சர்தார் விஜயம்


சென்னை சர்க்காரின் போலீஸ் மந்திரி கனம் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் மிடுக்காக மெய்க்காவல் புரிய....


....போக்கு வரவு மந்திரி ஸ்ரீ கோபால் ரெட்டியார் மரியாதையுடன் மோட்டார் வசதி செய்ய....
GOVT TRANSPORT


....உணவு மந்திரி டாக்டர் ராஜன் பரிவுடன் உணவு அளிக்க....


...விவசாய மந்திரி ஸ்ரீ மாதவ மேனன் கனிவுடன் கனிவகைகள் கொடுக்க...


....வைத்திய மந்திரி ஸ்ரீ ஏ.பி. ஷெட்டி ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்று "ஒரு பி.சி.ஜி. குத்திக் கொள்ளுங்கள்!" என்று உபசரிக்க,....
OUR MOTTO
B.C.G. FOR ALL
ALL FOR B.C.G.


....மராமத்து மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலம் பிரசங்க மேடையில் மைக் வைத்து ஒலி பெருக்க,....


....கல்வி மந்திரி ஸ்ரீ அவிநாசிலிங்கம் "அ-ஆ- கற்றுக் கொள்கிறேன்!" என்று முன் வர,....
அ ஆ இ


....சர்தார் படேல் சென்னைக்கு விஜயம் செய்துவிட்டுப் பத்திரமாகத் திரும்பிப் போய்ச் சேர்ந்தார்!

# பணத்தையும் கொடுத்துப் பொதியையும் சுமப்பதா?

ஒரு தேசத்துக்கு அழகைக் கொடுப்பது சுதந்திரமும் சுபிட்சமும்தான். சுபிட்சத்தின் அளவுகோலான வரவு செலவுத் திட்டத்துக்கு அழகைக் கொடுப்பது வரவுக்கு மிஞ்சிய செலவு ஏற்படாதிருத்தலும் பொது ஜனங்கள்மீது மேற்கொண்டு பளுவைச் சுமத்தாமல் இருத்தலும்தான்.

இந்த ரீதியில் பார்க்கும்போது, இந்திய சர்க்கார் மந்திரி ஸ்ரீ என். கோபாலசாமி ஐயங்கார் பார்லிமெண்டில் சமர்ப்பித்துள்ள ரயில்வே பட்ஜெட் திருப்தி அளிப்பதாக இருக்கிறது.

சென்ற வருஷம் சுதந்திர இந்தியாவின் முதலாவது ரயில்வே வரவு செலவுத் திட்டத்தை டாக்டர் மத்தாய் சமர்ப்பித்தபோது, "மிகவும் கஷ்டமான நிலையிலிருந்து இந்திய ரயில்வேக்கள் உத்தாரணம் அடைவது சமீப காலத்தில் இல்லை" என்ற தோரணையில் பேசினார். ஆனால் ஒரே வருஷத்தில்,—ஸ்ரீ கோபாலசாமி ஐயங்கார் பதவி யேற்றுக்கொண்ட நாலு மாதத்துக்குள் இவ்வளவு அபிவிருத்தி ஏற்பட்டிருப்பது எதிர்காலத்தில் நம்பிக்கையை உண்டுபண்ணுவதாக இருக்கிறது.

1949-50ம் வருஷத்திய ரயில்வே வரவு செலவுத் திட்டத்தில் பல திருப்திகரமான அம்சங்கள் அடங்கி யிருக்கின்றன.

சகல செலவுகளும் போக 9 கோடியே 44 லட்சம் ரூபாய் மிச்சம் எதிர்பார்க்கப்படுகிறது.

ரயில்வே சிப்பந்திகள், தொழிலாளர்களின் சம்பளமும் பஞ்சப்படியும் அதிகமாகி யிருக்கின்றன. போதாக் குறைக்கு சென்ற மகா யுத்தத்தினால் ஏற்பட்ட சீர்குலைவு இன்னும் தீரவில்லை. இந்தியா பிளக்கப் பட்டபோது ரயில்வேக்களும் பிரிக்கப்பட்டன. பஞ்சாப் படுபாதகங்கள், காஷ்மீர யுத்தம், ஹைதராபாத் போலீஸ் நடவடிக்கை போன்ற எதிர்பாராத கஷ்ட நஷ்டங்களையும் ரயில்வே நிர்வாகம் சமாளிக்கவேண்டி யிருந்தது. அப்படி யிருந்தும் கூட மிச்சம் ஏற்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

பிரஸ்தாப வருஷத்தில் ரயில்வே கட்டணங்கள் உயர்த்தப்பட மாட்டாது.

தேசத்தின் பொருளாதார நிலைமை சீர்கெட்டு விலைவாசிகளும், சம்பளமும் நாளுக்கு நாள் உயர்ந்து கொண்டே போவதால், கட்டணங்களை உயர்த்த வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது என்று சொல்லிக் கையை விரிக்காமல் ரயில்வே மந்திரி கட்டணங்களில் உயர்வு எதுவுமில்லை என்று அறிவித்திருப்பது சுபமான செய்திதான்.

இஞ்ஜின்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் நம் தேசத்திலேயே அமைக்கப் படுகின்றன.

குண்டூசி முதல் சகல சாதனங்களுக்கும் இந்தியா வெளிநாடுகளின் தயவை நாடும்படி பிரிட்டிஷார் செய்துவிட்டுப் போயிருக்கின்றனர். இத்தகைய அலங்கோல நிலைமைகள் சீர்படுவதற்குப் பல வருஷங்கள் வரையில் இந்தியா விடா முயற்சி செய்தாக வேண்டும். வெளிநாடுகளில் 863 இஞ்ஜின்களுக்கு முன்பே ஆர்டர் கொடுத்ததாயும் அவற்றில் 52 இஞ்ஜின்கள்தான் இந்தியாவுக்கு வந்து சேர்ந்திருக்கின்றன என்றும் ரயில்வே மந்திரி கூறியிருப்பதிலிருந்து நிலைமை எவ்வளவு மோசமாக இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

பிரிட்டிஷ் ஆட்சி நடந்து வந்த காலத்தில் இந்தியாவில் இஞ்ஜின்களை உற்பத்தி செய்ய வேண்டிய அவசியத்தை ஒவ்வொரு வருஷமும் அசெம்பிளியில் ஜனப்பிரதிநிதிகள் வற்புறுத்தினர். ஆனால் அது இந்தியாவில் அனுஷ்டான சாத்தியமல்ல என்று கூறி பிரிட்டிஷார் காலம் கடத்தி வந்தார்கள். அவ்விஷயத்தைப் பரிசீலனை செய்வதற்காக நியமிக்கப்பட்ட நிபுணர்களோ வெனில், இங்கு இஞ்ஜின்களை உற்பத்தி செய்வது முற்றிலும் சாத்தியம் என்று கூறியதுடன்,

மிகவும் அவசரமான காரியம் என்று சொல்லிவிட்டார்கள்.

அதற்கும் பிரிட்டிஷார் "யுத்தம் முடிந்த பின் பார்க்கலாம்" என்று மழுப்பி விட்டனர். இல்லாவிடில் இந்த நாட்டில் பல வருஷங்களுக்கு முன்பே இஞ்ஜின் உற்பத்திசாலை ஏற்பட்டிருக்கும். அந்தக் குறையை நிவர்த்திக்க இப்போது வழி பிறந்திருப்பது மகிழ்ச்சிக்குரியதாகும். 1951-ம் வருஷத்திலிருந்து இந்தியாவிலேயே இஞ்ஜின்கள் உற்பத்தியாகும் என்று ரயில்வே மந்திரி உறுதி கூறியிருக்கிறார்.

நெடுந்தூரம் பிரயாணம் செய்வோருக்குச் சில வசதிகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. முந்நூறு மைல்களுக்கு மேல் பிரயாணம் செய்வோருக்கு முக்கிய ஸ்டேஷன்களில் பிரத்யேகமாக டிக்கெட் கொடுக்குமிடங்கள் அமைக்கப்படுவதும் அத்தகைய வசதிகளில் ஒன்றாகும்.

*　　　*　　　*

ரயில்வே பட்ஜெட்டில் திருப்திகரமான அம்சங்கள் இருக்கின்றன வெனினும், மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளின் கஷ்டங்கள் தீருவதற்கு வழி உண்டா? என்ற கேள்விக்குச் சரியான பதில் இல்லை.

பிரிட்டிஷ் ஆட்சியின் போது ஏழை இந்தியர்களுக்கு இழைக்கப் பட்ட சகிக்க முடியாத அநீதிகளில் மூன்றாவது வகுப்புப் பிரயாணிகள் பட்ட கஷ்டங்களும் ஒன்றாகும். எனவே, சுதந்திர சர்க்காரின் ஆட்சிக் காலத்திலும் அதே நிலைமை நீடித்து வருவதை யாரும் கண்டிக்காமல் இருக்க முடியாது. மேற்படி பிரயாணிகளுக்குப் போதிய வசதிகள் செய்து கொடுக்காமல் மற்ற அம்சங்களில் ரயில்வே நிர்வாகம் எவ்வளவு சிறந்ததாக இருப்பினும், குடத்திலுள் ஏற்றி வைத்த தீபம்போல் அது பிரகாசிக்க முடியாது.

நம் நாட்டில் ரயில்வேக்களுக்கு மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளால் தான் அதிக வருமானம் கிடைக்கிறது. ஆனால், அவர்களால் கிடைக்கும் வருமானத்தின் பலன் முழுவதையும் முதலாவது வகுப்புப் பிரயாணிகள்தான் அனுபவிக்கிறார்கள்.

அதிகப் பணம் கொடுத்து அதிகப் பொதியையும் சுமக்கும் இந்த அக்கிரமம், இந்தத் தலைகீழான நிலைமை மாற வேண்டும்; சிறிதும் தாமதமின்றி உடனே மாறவேண்டும்.

சர்க்கார் பொதுஜனங்களின் சர்க்கார். ரயில்வேக்கள் பொது ஜனங்களின் சொத்து. அப்படியிருக்க, அதில் பொது ஜனங்களுக்கு வசதிகள் இல்லையெனில், அதைக் காட்டிலும் கேவலமான நிலைமை வேறென்ன இருக்க முடியும்?

மூன்று அல்லது நாலு வகுப்புகள் என்றிருப்பதைக் காட்டிலும் இரண்டே வகுப்புகள் இருப்பதுதான் நன்மையாகும். அவ்விதமாயின் இரு வகுப்புகளுக்கும் சீரான வசதிகளைச் செய்து கொடுப்பது சுலபமாக இருக்கும்.

*　　　*　　　*

பொது ஜனங்களின் சொத்தான ரயில்வேக்களில் அவர்களுக்கு அதிக வசதிகளை அளிக்க வேண்டியது எவ்வளவு அவசியமோ, அதுபோலவே அதில் வேலைசெய்யும் தொழிலாளருக்கும் அதிக வசதிகளை அளிக்கவேண்டியது அவசியமாகும்.

இந்த விஷயத்தில் சர்க்கார் பெருந்தன்மையுடன் நடந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை ஸ்ரீ ஜெயப்பிரகாச நாராயண்கூட ஒப்புக்கொண்டு, ரயில்வேத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தை ஒத்திவைக்கும்படி ஆலோசனை கூறியதை மிகவும் போற்றுகிறோம். அந்த ஆலோசனையை அகில இந்திய ரயில்வேத் தொழிலாளர் பெடரேஷன் ஒப்புக்கொண்டதும் பாராட்டுதற்குரியது.

"தொழிலாளர்களின் பஞ்சப்படி அதிகமாவதைக் காட்டிலும் விலைவாசிகள் குறைவதே முக்கியமானது. பஞ்சப்படி உயர்வதற்குத் தகுந்தவாறு விலைகளும் உயர்ந்து கொண்டுபோனால், தொழிலாளர் பயன்பெற மாட்டார்கள். எனவே, விலைவாசிகளைக் குறைக்க சர்க்காருக்கு சில மாதங்கள் வரையில் அவகாசம் கொடுங்கள். சில மாதங்களுக்குப் பிறகும் விலைகள் குறையாவிடில் பஞ்சப்படியை உயர்த்தும்படி நாம் சர்க்காரைக் கேட்பது நியாயமாக இருக்கும்" என்று ஸ்ரீ ஜெயப்பிரகாசர் தொழிலாளருக்குப் புத்திமதி கூறியிருக்கிறார்.

"பொது ஜனங்களின் ஆதரவில்லாத வேலைநிறுத்தம் வெற்றிபெற முடியாது" என்று அவர் கூறியிருப்பதை ரயில்வேத் தொழிலாளர் மாத்திரமின்றி மற்றெல்லாத் தொழிலாளரும் மனதில் பதிய வைத்துக் கொள்ள வேண்டியது அவசியம். சமீப காலமாகப் படுதோல்வியுற்ற பல வேலை நிறுத்தங்களும் அதற்குச் சான்றாகும்.

# கப்பலோட்டும் தமிழர்

★

தமிழ் நாட்டில் பிறந்த தேசபக்தி வாய்ந்த தமிழர் ஒவ்வொருவருக்கும் 'தூத்துக்குடி' என்று சொன்னால் உடல் புல்லரிக்கும். தேசத் தொண்டு இத்தகையது, தியாகம் இத்தகையது என்று தமிழர்களுக்குக் காட்டிக் கொடுத்த உத்தமர் ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளை தூத்துக்குடியில் பிறந்தார்; வளர்ந்தார்; தொண்டு புரிந்தார்; தமிழ் நாட்டுக்கும் தமிழருக்கும் அழியாத பெருமை தந்தார்.

இன்று தூத்துக்குடியில் ஸ்ரீ வ. உ. சி. யின் தேசபக்திக்கும் தியாகத் தொண்டுக்கும் நேரான வாரிஸாக விளங்குபவர் ஸ்ரீ எம். சி. வீரபாகுப் பிள்ளை. அவரைப் போல் இவரும் வக்கீல் தொழிலை விட்டார். தேசத்தொண்டு செய்தார்; சிறை புகுந்தார்: கடைசியில் இப்போது அவரைப் போலவே இவரும் கப்பல் ஓட்ட முன்வந்திருக்கிறார்.

ஆனால் காலம் மாறியிருக்கிறது. ஸ்ரீ வ. உ. சி. தம் வாழ்நாளில் சுதந்திர சூரியோதயத்தைக் காணவில்லை. ஸ்ரீ வீரபாகுப் பிள்ளை கண்டு விட்டார். ஸ்ரீ வ. உ. சி கப்பலோட்டும் தொழிலில் வெற்றி காணவில்லை; ஸ்ரீ வீரபாகுப் பிள்ளை வெற்றி காணப்போகிறார்.

ஸ்ரீ வ. உ. சி. தம்முடைய காலத்தில் செடியை நட்டார்; அதற்குத் தண்ணீரும் கண்ணீரும் கலந்து விட்டார்.

அந்தச் செடி இன்று மரமாகிப் பூத்துக் காய்த்துக் குலுங்குகிறது. காயைக் கனியாக்கித் தமிழ் மக்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கும் பாக்கியம் ஸ்ரீ எம். சி. வீரபாகுவுக்குக் கிடைத்திருக்கிறது.

அரசியலில் சஞ்சலமற்ற உறுதியும் தளராத நேர்மையும் படைத்தவர் ஸ்ரீ எம். சி. வீரபாகு. நாலு வருஷத்துக்கு முன்பு தமிழ் நாட்டில் நடந்த ராஜாஜி விவாதத்தில் ஸ்ரீ எம். சி. வீரபாகுவின் அந்தியந்த நண்பர்கள் பலர் எதிர்க் கட்சியில் இருந்தார்கள். ஆனால் ராஜாஜியின் தலைமையே நாட்டுக்கு உகந்தது என்று உறுதியாக நம்பிய ஸ்ரீ எம். சி. வீரபாகுப் பிள்ளை தம்முடைய கொள்கையை விடாமல் வற்புறுத்தி வந்தார். சீர்காழிக் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார்; கல்கத்தாவுக்குக் காங்கிரஸ் தலைவர்களிடம் தூது சென்றார்.

சென்னைச் சட்டசபைக்குத் தேர்தல் வந்தபோது ஸ்ரீ எம். சி. வீரபாகுவை அபேட்சகராக எடுக்கவில்லை. அதனால் அவர் மனம் சலித்ததா? கிடையாது! பிறகும் அவர் ராஜாஜியின் தலைமையையே உறுதியாகக் கோரி வந்தார்.

ராஜாஜியிடம் உள்ள தீர்க்கதரிசன சக்தியின் வாடை ஸ்ரீ எம். சி. வீரபாகுவிடமும் அடித்தது. ஸ்ரீ வ. உ. சி ஆரம்பித்த கப்பலோட்டும் திருப்பணியைத் திரும்ப ஆரம்பித்துப் பூர்த்தி செய்யத் தருணம் வந்து விட்டது என்று கண்டார். மூன்று வருஷத்துக்கு முன்னால் கப்பல் கம்பெனி ஒன்று ஸ்தாபித்தார்.

கம்பெனி ஸ்தாபித்தால் மட்டும் போதுமா? வியாபாரக் கப்பல் ஓட்டுவது என்பது இலேசான காரியமா? லட்சக் கணக்கில் பணம் போட்டல்லவா கப்பல் வாங்கவேண்டும்? அவ்வளவு பணத்துக்கு எங்கே போவது? போதிய பங்குகளும் பணமும் உடனே சேரவில்லை! .... ஆயினும் ஸ்ரீ வீரபாகு பொறுமையுடன் பிரயத்தனம் செய்துகொண்டிருந்தார். இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகு வெள்ளைக்காரக் கப்பல் கம்பெனியார் கடையைக் கட்டத் தீர்மானித்தார்கள். சுதேசிக் கப்பல் விடுவதற்குச் சரியான சமயம் வந்தது. சென்னைக் காங்கிரஸ் மந்திரி சபையார் கனம் பக்தவத்ஸலத்தின் மூலம் உதவி செய்ய முன் வந்தார்கள். ஸ்ரீ வீரபாகு சந்தர்ப்பத்தை நழுவவிடவில்லை; தாமதம் செய்து ஆறிய கஞ்சி பழங் கஞ்சி ஆக்கவும் இல்லை. உடனே முயற்சிசெய்து வர்த்தகக் கப்பல் ஒன்றை வாங்கினார்; ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளையின் பெயரை அதற்கு வைத்தார்; கவர்னர் ஜெனரல் ராஜாஜியை அழைத்து வெள்ளோட்ட விழாவும் நடத்தி முடித்தார்.

தூத்துக்குடிக்கும் இலங்கைக்கும் வ. உ. சி. கப்பல் இன்று போய் வருகிறது. விசாகப் பட்டினம் துறை



# இராஜாவும் வந்தார்! மழையும் பெய்தது!

எம். ஆர். மேகநாதன்

தூத்துக்குடிக்கு ராஜாஜி வருகிறார் என்ற பத்திரிகைச் செய்தியைப் படித்து விட்டுப் பலர் வந்து "உங்கள் ராஜாஜி வருகிறாராமே! கல்நாட்டு விழாவிற்குக் கால்மணி நேரம் வாங்கித் தந்தால் போதும்; திறப்பு விழாவிற்கு 'த்ரீ' மினிட்ஸ் கொடுத்தால் போதும்; மாலை மட்டும் போடக் கொஞ்சம் மனம் வைக்க வேணும்; பத்து நிமிஷப் பேட்டிக்குப் 'பெர்மிட்' வாங்கிக் கொடுங்கள்!" என்றெல்லாம் கேட்க ஆரம்பித்தார்கள். "பதவி எதுவும் இல்லாமல் இருக்கும் போதுதான் என்னுடைய ராஜாஜி; இப்போது உங்களுடைய கவர்னர் ஜெனரல்! ஆதலால் அதையெல்லாம் நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லி விட்டுப் புறப்பட்டேன்.

பிப்ரவரி மீ 7உ இரவு தூத்துக்குடி போய்ச் சேர்ந்தேன். துறைமுகத்திலும் ஊரிலும் ஒரு மாறுதலும் காணப்படவில்லை. ஆனால் 9-ம் தேதி காலையில் கல்லும் கரடும் மேடுமாக இருந்த கடற்கரைப் பிரதேசம் கண்காட்சிச் சாலையாக மாறிவிட்டது. அதிகாலையிலே ஆணும் பெண்ணும் ஊர் அலங்காரக் காட்சிகளைப் பார்க்கக் கிளம்பி விட்டார்கள். நகரத்தில் போட்டிருந்த பந்தல்களில் ஒன்று கூடக் கப்பல் கம்பெனியார் போட்டதல்ல. ராஜாஜி வருகிற ஆனந்தத்தில் அங்கங்கே அவரவர்களே அற்புதமான பந்தல்களை அமைத்து விட்டார்கள்! நகரத்தில் மட்டுமா? ராஜாஜி வருகிற பாதை ஐம்பது மைல் தூரத்தையும் கிராம மக்கள் 'ஆர்ச்சுகள்' போட்டு அலங்கரித்து வைத்திருந்தார்கள்.

ராஜாஜி விமானம் 10-30 மணிக்கு கயத்தாறு வந்து சேர்ந்தது. விமான நிலையத்திலிருந்து கயத்தாறு ஊர் வரும் வரையில் ராஜாஜியுடன் ஸ்ரீ எம். சி. வீரபாகு காரில் வந்தார். "அன்று நான் சின்ன வக்கீலாக இருந்தபோது, தந்தையின் கோபத்தைக்கூடப் பொருட்படுத்தாமல், பத்து 'ஷேர்கள்' (1000 ரூபாய்) வ. உ. சி. யால் அமைக்கப்பட்ட சுதேசி ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனியில் போட்டிருந்தேன். தம்பிடிகூடக் கைக்கு வரவில்லை. நீங்கள் அவர்கள் பரம்பரையானால், அந்தப் பத்து 'ஷேர்'களையும் கொடுத்து விடுங்கள்!" என்று வேடிக்கையாக ஸ்ரீ எம். சி. வீரபாகுவிடம் ராஜாஜி கேட்டார். "ராஜாஜி கேட்டபடி கொடுத்தால் என்ன?" என்று ஸ்ரீ வீரபாகுவிடம் கேட்டேன். "நாம் இப்படிப் பேசிக் கொள்வது வெளியில் தெரிந்தால் போதும். நாளையிலிருந்து பழைய 'ஷேர்' தாரர்கள் நோட்டீஸ் கொடுக்க ஆரம்பித்து விடுவார்கள்!" என்று சொல்லிச் சிரித்தார் ஸ்ரீ வீரபாகுப் பிள்ளை.

கயத்தாறு கிராமத்தில் பழைய நண்பர்களுடன் சாப்பிட்டபின் சற்றுக் கூட இளைப்பாறாது சக்கரவர்த்தி புறப்பட்டார். ராணுவத்தினரும் போலீசாரும் அணிவகுத்து நிற்பதை இதற்குமுன் பார்த்திருக்கிறேன். பொது மக்கள் குழந்தைகள் முதல் முதியவர்கள் வரை, ஆண் பெண் அனைவரும் ஐம்பது மைல் தூரம் அணிவகுத்து நின்று தங்கள் அருமைத் தலைவருக்கு மரியாதை செலுத்தின காட்சியைக் கண்டதில்லை. விழாவில் கலந்துகொண்ட ஜனங்களின் தொகையைவிட வழிநெடுக நின்று வரவேற்ற மக்களின் தொகை பன்மடங்கு இருக்கும். கார் தூத்துக்குடி நகர எல்லைக்குள் பகல் ஒரு மணிக்கு வந்ததும் ஸ்ரீ காமராஜ், டாக்டர் சுப்பராயன் முதலியவர்கள் ராஜாஜியை எதிர்கொண்டு வரவேற்று 'மனோரமா' மாளிகைக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். நகரத்துக்குள் ராஜாஜி வீற்றிருந்த கார் வந்ததும் சாலை ஓரத்தில் அணிவகுத்து நின்ற ஆயிரக் கணக்கான மக்கள் கைதட்டி ஆர்ப்பரித்தார்கள். ராஜாஜி பம்பரம் மாதிரி சுற்றி இரண்டு பக்கமும் கைகூப்பி, நமஸ்கரித்துக் கொண்டே போனார். எனக்கு ஆனந்தக் கண்ணீர் ஊற்றருவி போலப் பொங்கிற்று.

பல வருடங்களாக, கடைத் தெருக்களில் நடக்கும் பற்பொடி விற்பனைக் கூட்டத்தைப்போல் பல அரசியல் கூட்டங்களைப் பார்த்துச் சலிப்படைந்த மக்கள் பகல் ஒன்றரை மணிக்கே கடற்கரையில் அமைத்திருந்த பந்தலைச் சுற்றிக் கூட ஆரம்பித்து விட்டனர். பந்தலுக்குள் போக அனுமதிச் சீட்டு வைத்திருந்தார்கள். 'ஸ்பெஷல் பாஸ்' என்று சி. ஐ. டி. காரர்களுக்கும் நம்பிக்கை உள்ள ஊழியர்களுக்கும் கொடுத்து எல்லா இடத்துக்கும் போக அனுமதித்

திருந்தார்கள். அது போக லாஞ்சுக்குப் பாஸ், ரயிலுக்குப் பாஸ், பெண்களுக்குப் பாஸ், பத்திரிகைக் காமிராக்காரர்களுக்குப் பாஸ், கார்டன் பார்ட்டிக்குப் பாஸ் என்று வைத்திருந்தார்கள். ஆனால் பெண்கள் பாஸ் இல்லாமலே பந்தலில் பாதிக்கு மேல் ஆக்கிரமித்துக் கொண்டார்கள். ஆண்கள் இடமின்றி அவதிப்பட்டார்கள். ஆண்களை விடப் பெண்கள் விழாவிற்கு அதிகம் வந்திருப்பதைப் பார்த்ததும் வருகிற தேர்தலில் பிரதம மந்திரிப் பதவியைப் பெண்கள் அடித்துக்கொண்டு போய்விடுவார்களோ என்ற அச்சம் ஏற்பட்டது.

என்னிடம் பாஸ் இருந்தபோதிலும் கூட்டத்தைப் பிளந்து கொண்டு போக முடியவில்லை. கூட்டத்தின் ஓரத்திலேயே சற்று நின்றேன்.

கூட்டத்தில் ஒருவர் "சார்! ராசாசி பீச் இங்கிலீஷிலேதான் இருக்குமோ?" என்றார். (பீச்-ஸ்பீச்-பேச்சு.)

"அதெப்படியிருக்கும்? அவர் தமிழில் ரொம்ப வேடிக்கையாகப் பேசுகிறவராச்சே!" என்றார் மற்றொருவர். "ராஜாஜி கவர்னர் ஜெனரல் ஆன பிறகு மகாத்மா காந்தி மாதிரி தன தனன்னு தங்க நிறம் கொடுத்திருக்கிறது!" என்றார் ஒருவர்.

"காரில் வரும்போது பார்த்தேன். முகம் என்ன பளபளப்பாயிருக்கிறது தெரியுமா?" என்றார் இன்னொருவர்.

"சிதம்பரனார் 'பக்கா' நாஸ்திகர்!" என்றார் ஒரு பகுத்தறிவாளர்.

"இல்லவே இல்லை; அவர் பக்தியுள்ள ஆஸ்திகர்!" என்றார் இன்னொருவர்.

"ஆஸ்திகராவது? நாஸ்திகராவது? வந்தேமாதரம் என்று சொன்னால் அடியும் மிதியும் சிறைத் தண்டனையும் கிடைத்து வந்த அந்தக் காலத்தில் 'பெண்டு பிள்ளைகள் வேண்டேன், மாதா பிதா வேண்டேன், தனக்கென ஒன்றும் வேண்டேன்' என்று, தேசசேவையே மனிதனின் முதற்கடமை எனக் கொண்டு, தடியடிக்கும் தண்டனைக்கும் அஞ்சாது வஞ்சகர் சூழ்ச்சிக்குத் தளராமடையாது வாதனை சோதனைக்கு மத்தியில் சாதனையே பெரிதெனத் தன்னையே அர்ப்பணம் செய்தவர் ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளை. அப்படிப்பட்ட வ. உ. சி. பெயருடைய கப்பலை அலை கடலிலே, சூழ்புனலிலே, துள்ளிக் குதித்து ஓடிவர முதலில் தள்ளிவிட வேண்டுமே? அக் கைங்கரியத்தைச் செய்யும் புனிதக் கரங்கள், புண்ணியம் செய்ததும் தேச சேவை செய்ததும் காட்டுக்காக விடுதலைத் தவம் புரிந்ததுமாக



## பிரபல திருமணம்

•

போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஸ்ரீ சி. கே. விஜயராகவனின் சகோதரரான லெப்டினன்ட் கர்னல் ஸ்ரீ சி. கே. லக்ஷ்மணன் அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி ஸ்ரீலதாவுக்கும் ராயல் இந்திய விமானப் படையைச் சேர்ந்த சிரஞ்சீவி கத்ரி அவர்களுக்கும் பிப்ரவரி 9-ந் தேதி அடையாறு 'பிரிட்ஜ் ஹௌஸி'ல் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. ஏராளமான நண்பர்களும் பிரமுகர்களும் விவாகத்துக்கு விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்தார்கள். மாலையில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசை விருந்து நடைபெற்றது.

வாழ்க கத்ரி — ஸ்ரீலதா



இருக்க வேண்டுமே என்று எண்ணிப் பார்த்து கம்பெனியார் ராஜாஜியைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். எஸ். எஸ். சிதம்பரம் என்றிருந்தால் போதும் என்று கம்பெனியாருக்கு ராஜாஜி தந்தி கொடுத்தார். அப்படியே கம்பெனியாரும் விளம்பரப் படுத்தினார்கள். வம்பர்கள் உடனே ஆரம்பித்து விட்டார்கள். 'வீரபாகுப் பிள்ளையின் தந்தை பெயர் சிதம்பரம் பிள்ளை; அதைத் தந்திரமாகச் சூட்டி விட்டார்' என்றனர். ராஜாஜி சொல்லைக் கூடக் கேளாது "கப்பலுக்கு எஸ். எஸ். வி. ஓ. சிதம்பரம் என்றே பெயர் சூட்டப் போகிறார்கள்!" என்பதாக ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தேன்.

இந்தச் சமயத்தில் கரகரப்பிரியா ராகத்தில் ஒலிபெருக்கி மூலம் ஸ்ரீ வீரபாகுப் பிள்ளை குரல் கேட்டது. ஜிப்பாவையும் பைஜாமாவையும் பொருட்படுத்தாது மனிதர்கள் மீது நீந்திக்கொண்டு மேடை தெரிந்த இடம்வரை மூரல் மூச்சில் வந்து சேர்ந்தேன். "எதுவரை நடந்திருக்கிறது?" என்று பக்கத்திலிருந்தவரைக் கேட்டேன். "பிரார்த்தனைப் பாட்டும் வீரபாகுவின் பாதிப் பிரசங்கமும் நடந்திருக்கிறது. இதற்குள் ஒலிபெருக்கியின் உயிர் போய்விட்டது" என்று அவர் கூறிவிட்டு, "எப்படியாவது இதை ராஜாஜி கையில் சேர்த்துவிட வேண்டும்" என்றார்.

"எதை?" என்றேன் நான்.

"ஹைதராபாத் வெற்றிக்காக தளபதி ராஜேந்திர சிங்குக்குக் காயல்பட்டினம் முஸ்லிம்கள் சார்பாக இந்தத் தங்கப் பதக்கத்தைக் கவர்னர் ஜெனரல் மூலம் கொடுப்பதென்று சில மாதங்களுக்கு முன்னே தீர்மானித்து வைத்திருந்தோம். எப்படியாவது ஏற்பாடு செய்ய வேண்டும்!" என்றார். "பாஸை முன்னால்

காண்பித்துக் கொண
தலை நிமிர்ந்த தமிழனை
போல் மேடையை நோ
கிப் பாயுங்கள்!" எ
றேன். பார்த்தார் ஜன
பி. எம். கே. சைய
மூகம்மது. அவரைப் பி
தொடர்ந்து நானும் செ
றேன். ஒரு போலீஸ் அ
காரி, "நில்!" என்று
நின்றேன். "அது என்
ஆயுதம்?" என்று கே
டார். "இது விபூதி: கு
கும ஆயுதம்!" என்
பதிலளித்தேன். "வாட்
வாட்?" என்றார். "நீங்க
மட்டுந்தானா? பிரதம
ரெட்டியார் பட்ட பாடு தெரியுமா?
என்றார் பக்கத்தில் நின்றவர். சந்தே
ஷத்தில் தலைகால் தெரியாமல் மேடையை
அணுகிப் பதக்கத்தை ராஜாஜியிட
கொடுக்க ஏற்பாடு செய்துவிட்டுப் பக்க
தில் உட்கார்ந்தேன். ஸ்ரீ வீரபாகு மேலு
பேசிக்கொண்டு போனார்:—

"நாங்கள் இருப்பது நாட்டின் தெ
கோடி. தாங்கள் இருப்பது இமய மலை
அடுத்த பிரதேசம். தங்களுடை
பொறுப்புகளோ இமாலயத்தை விட
பெரியவை. இந்திய சரித்திரத்திலே
இது மிக நெருக்கடியான நேரம். எனினு
தாங்கள் இவ் விழாவுக்கு விஜயம் செ
ததை நாங்கள் என்றும் மறக்க முடியாது
இம்மாகாண முழுவதும் தங்களுக்
மிகவும் கடமைப்பட்டிருக்கிறது.

"மகாத்மாஜியை நாங்கள் கண்ட
தங்கள் மூலமாகவும் தங்கள் செயல்க
மூலமாகவும்தான். தாங்கள் ஒப்பற்
நிர்வாகத் திறமையினால் இந்தியா
ளுள்ள மாகாணங்களில் சென்னைக்
அரசியல் நிபுணத்துவத்தில் முதன்மை
யான ஸ்தானம் வாங்கிக் கொடுத்திரு
கிறீர்கள். இப்போதே நம நாட்டி
முன்னேற்றத்திற்கு அதி முக்கியமா
வியாபாரக் கப்பல் தொழிலுக்கு ஆசி
யும் நல்லாசியும் வழங்க கருணை கூர்ந்
முன் வந்திருக்கிறீர்கள்! இத்தனை பெரி
உதவிக்கு நாங்கள் என்றும் நன்றி செலு
தக் கடமைப்பட்டிருக்கிறோம். சென்
மாகாணத்திற்கு நீண்டதொரு கடற்கரை
அமைந்திருக்கிறது. பண்டைய நாளி
கடலாதிக்கம் செலுத்திக் கப்பலோட்
வியாபாரம் நடத்திக் கீர்த்தியும் பெற்
வர்கள் தமிழர்கள். ஆனால் தற்கால
தில் ஒரு ஸ்டீமர்கூட இம்மாகாணத்தி
குச் சொந்தமில்லை. சரித்திர காலத்தி
தமிழர்கள் இலங்கை, மலேயா, பர்ம

...யாம், மோரீஷஸ் முதலிய தேசங்களோடு கப்பல்கள் மூலம் வியாபாரம் நடத்தியிருக்கிறார்கள். 1907-ல் இந்தியாவில் சுதேசி ஸ்டீமர் கம்பெனியை முதல் தடவையாக நடத்தியவர் ஒரு தமிழர்; வீரப்போர் நடத்திய தியாகி வ. உ. சிதம்பரம் பிள்ளை. அவர் பாடுபட்ட இடமும் இந்தத் தூத்துக்குடிப் பட்டினம். முயற்சித்த தொழிலும் இந்தக் கொளும்பு லைன்தான். அவர் வழி காட்டினார். நாம் பின்பற்றுவதற்கு நாற்பது வருடங்களுக்கு மேல் ஆகிவிட்டது. சர்க்கார் உதவி இருந்தும் இந்த ஸ்டீமரைக் கொண்டு வந்து சேவையில் நிறுத்துவதற்கு நாங்கள் பட்ட கஷ்டங்களை நினைக்கும்போது 1907-ம் வருடத்திலேயே இவ்வளவு அபாரமான வேலையைச் செய்த தீர புருஷனின் வீரம் ஆச்சரியத்தையும் அடங்கா வியப்பையும் தருகிறது. அந்த அற்புத சுதேசி ஸ்டீமர் முயற்சி நம்ப முடியாத கட்டுக்கதை என்று எண்ணும்படியாக இருக்கிறது. அப்பேர்ப்பட்ட தீர புருஷனின் திரு நாமத்தைத்தான் எங்கள் கப்பலுக்குச் சூட்டத் தீர்மானித்திருக்கிறோம்.

"இவ்வரிய சந்தர்ப்பத்தில் எங்கள் பிரதமர் ஓ. பி. ராமசாமி ரெட்டியார் அவர்களுக்கும் கனம் துறைமுக இலாகா மந்திரி அவர்களுக்கும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். எங்கள் முயற்சி இத்தனை வெற்றி அடைவதற்கும் முக்கிய காரணம் அவர்கள் தீர்க்க தரிசனத்துடன் அளித்த உதவியும் ஆதரவுமாகும். ஆரம்பத்திலிருந்தே கனம் பக்தவத்ஸலம் அவர்கள் இந்த முயற்சிக்கு உதவி செய்து கடைசிவரை எங்கள் முயற்சியை ஜெயம் பெறும்படி செய்தார்கள். நிதிப் பிரச்னையில் அதிக ஜாக்கிரதையாக இருக்கும் கனம் பிரதமர் அவர்களின் ஆதரவைப்பற்றி நான் சிறிது சந்தேகப்பட்டதுண்டு. ஆனால் சர்க்கார் பணத்திற்குத் தகுந்த பந்தோபஸ்துக்கள் ஏற்படுத்தினார்களே தவிர மற்றப்படி முழு மனதுடன் எங்களுக்கு ஒத்தாசைசெய்தார்கள். இந்த ஸ்டீமர் கம்பெனி நம்முடைய மாகாண சர்க்காருக்குச் சொந்தம் என்றே சொல்லலாம். ஆகையினால் கனம் பிரதம மந்திரியவர்கள் மேன்மை தங்கிய கவர்னர் ஜெனரல் அவர்களை இந்த தூத்துக்குடி—கொளும்பு ஸ்டீமர் சர்விஸை ஆரம்பித்து வைக்கும்படியும் வ. உ. சிதம்பரம் என்று நாமகரணம் சூட்டும்படியும் கேட்டுக்கொள்வது மிகவும் பொருத்தமாயிருக்கும். ஜெய் ஹிந்த்!" என்று கப்பல் கம்பெனி நிர்வாகி ஸ்ரீ எம். வி. வீரபாகுப் பிள்ளை வரவேற்புரையை முடித்தார்.

"சுவாமியே சரணம் ஐயப்பா!" என்று என் பக்கத்தில் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். தாடி வளர்த்த முகத்துடன், காந்திக் குல்லாய் அணிந்த கம்பீர புருஷர் ஒருவரை இரண்டு பையன்களுடன் கண்டேன். "சுவாமி சரணம் ஐயப்பா!" என்றேன். "பாருங்கள், தெய்வீக சக்தியை! எனக்கு மட்டும்தான் பாஸ் இருந்தது. இம்மூன்று பேரையும் என்னோடு எப்படி அழைத்துவர முடிந்தது? இக்காட்சியைக் காண வருவேன் என்று கனவிலும் எண்ணவில்லை. நேற்றிரவு தான் தேவி விடை கொடுத்தாள். விடியுமட்டும் விழித்திருந்து 'கப்பலின் காட்சியைக் கண்டோம்' என்ற பாட்டைக் கணப்பொழுதில் கட்டி, காலையில் புறப்பட்டு என் காந்தி மகானைத் தரிசிக்க வந்தேன். எல்லாம் தேவியின் சக்தியால்தான் இயங்குகிறது. எப்படியாவது என் குழந்தைகள் இந்த மேடையில் ராஜாஜி மீதும் கப்பல் மீதும் கவி பாடியாகவேண்டும். எல்லாம் தெய்வச் செயல். சுவாமி, சரணம் ஐயப்பா!" என்றார் சுவாமி ராஜமாணிக்கம் பிள்ளை.

ராஜாஜி பேச எழுந்ததும் 'சட, சட' வென்று சரமாரியாகக் கை தட்டினார்கள். பிறகு ஊசி விழுந்தால் சத்தம் கேட்கும்படியான நிசப்தம். அவர்களுக்கே உரிய பாணியில் "முன்னால் ஜன சமுத்திரம்; பின்னால் ஜல சமுத்திரம்" என்று பேச ஆரம்பித்தார்கள். "அங்கும் அலை ஓசை; இங்கும் அலை ஓசை!" என்று அடுத்தாற்போல் சொல்லிவிட்டு, பழைய காலத்தில் இந்தியாவின் கப்பல் தொழில் சிறந்து விளங்கியது பற்றிச் சரித்திர ஆதாரங்களுடன் பேசினார்கள். கடைசி



யாக, "இந்தியா தேசம் ஒன்று. அதன் பெருமை பிரிக்க முடியாதது. ஆனால் கடலில் இந்தியக் கப்பல்களை மீண்டும் செலுத்த வேண்டும் என்ற பெரும் முயற்சி முதலில் தென்னாட்டில் தான் தொடங்கப்பட்டது என்னும் பெருமையைத் தென்னாட்டு மக்கள் அடையலாம். காலஞ் சென்ற நமது வீரர் வ. உ. சிதம்பரம் பிள்ளையின் பெயரை நமது தேசக் கொடியைத் தாங்கிச் செல்லும் இந்தக் கப்பலுக்கு இடுவதில் நான் பெருமை அடைகிறேன். ஒவ்வொரு தமிழ் மகனும் இந்தக் கப்பலில் தூசி பட்டால் தன்னுடைய மேல்துண்டால் துடைப்பதற்குத் தயாராயிருக்க வேண்டும். இந்தக் கப்பலின் நாயகர், மாலுமிகள், சிப்பந்திகள், நிர்வாகஸ்தர்கள் ஆகிய யாவருக்கும் என் ஆசிகள்" என்று கூறி முடித்தார்கள்.

ஜி. ஜி. ராஜாஜி மீதும், வி. ஓ. சிதம்பரம் கப்பல் மீதும் நவாப் ராஜமாணிக்கம் பிள்ளையின் மாணவர்கள் உள்ளம் கனியப் பாடினார்கள். கப்பல் படம் பொறிக்கப்பெற்ற வெள்ளித் தாம்பாளம் ஒன்று கவர்னர் ஜெனரலுக்கு கம்பெனியாரால் கொடுக்கப்பட்டது. கனம் பக்தவத்ஸலம் அவர்கள் நன்றி கூறினார்கள். ஜி. ஜி. அவர்களும் பிரதம மந்திரி ரெட்டியார் அவர்களும் மற்றும் மந்திரிகள் காவலர்கள் புடைசூழக் கடற் படையைச் சேர்ந்த ராணுவ லாஞ்சில் ஏறி, ஐந்து மைல் தூரத்தை அரை மணி நேரத்தில் கடந்து, அங்கிருந்த கப்பலில் ஏறினார்கள். கேப்டன் கோட்னி கவர்னர் ஜெனரலை வரவேற்றார். கடலைக் கடந்து கப்பலிலே தானே 'ஓம் சக்தி' என்ற பாரதியார் பாட்டை நவாப் ராஜமாணிக்கம் மாணவர்கள் பாட, கவர்னர் ஜெனரல் ராஜாஜி தேங்காய் உடைத்துத் தெய்வத்தை வேண்டிச் சந்தனம் மஞ்சள் கலந்து எழுதி, வ. உ. சிதம்பரம் என்று கப்பலுக்குப் பெயர் சூட்டினார்.

மாலை 6-30 மணிக்கு ஆயிரம் பேர்களடங்கிய தோட்ட விருந்தில் ராஜாஜி கலந்து கொண்டு தனித்தனியே ஒவ்வொருவரிடமும் போய் விசாரித்ததைப் பார்த்த ஆங்கிலேயர்களும் விருந்தில் கலந்துகொண்ட விவசாயிகளும் தொழிலாளர்களும் வியப்படைந்தார்கள்.

"இந்த மகான் தலைமை வகிக்கும் சர்க்காரை முதலாளி சர்க்கார் என்று நம்ம ஊரில் பேசுகிறானே, அவனுக்கு மண்டபப்படி காரியாகத்தானே இருக்க வேணும்!" என்று ஒரு மில் தொழிலாளி மற்றொரு தொழிலாளியிடம் விருந்து முடிந்து வெளியில் வரும்போது சொல்லிக் கொண்டு வந்தார்.

இரவு மணி 8-30. ராஜாஜி ரயிலுக்கு புறப்பட வேண்டிய நேரம். கப்பல் கம்பெனி நிர்வாகிகளுக்கு ராஜாஜி முடிவாகப் புத்தி சொல்லி விடைபெற்றுக் கொண்டு ரயிலில் ஏற, என்ஜின் எக்காளத்துடன் இழுத்துச் சென்றது. ரயில் போய்க் கொஞ்சம் நேரம் ஆகியிருக்கும் 'மடமட' வென்று மழை பெய்ய ஆரம்பித்தது. "இத்தனை நாளும் காய்ந்து கிடந்த ஊரில அந்த மகானும் வந்தார் மழையும் பெய்தது!" என்று போன மக்கள் வாழ்த்திக் கொண்டு போனார்கள்.

## ★ ★ ★ ★ வழுவூர் ஸ்ரீ மாணிக்கம் பிள்ளை ★ ★ ★ ★



பரதநாட்டியக் கலைக்குத் தற்காலத்தில் புத்துயிரும் புதுமெருகும் கொடுத்துப் புகழ்பெற்று விளங்கும் நாட்டிய கலாகேசரி வழுவூர் ஸ்ரீ ராமய்யாப் பிள்ளையின் தாய் மாமனும் குருவுமான வழுவூர் ஸ்ரீ எஸ். மாணிக்கப்பிள்ளை அவர்கள் சென்ற பதினொருந்தேதி புதன்கிழமையன்று இம்மண்ணுலகை விட்டு இறைவன் திருவடி சேர்ந்தார் என்ற செய்தி கேட்டு வருந்துகிறோம். காலஞ்சென்ற ஸ்ரீ மாணிக்கம் பிள்ளை அவர்கள் பரதநாட்டியக் கலையைக் குலதனமாகப் பெற்ற புராதன பரம்பரையைச் சேர்ந்தவர். நீடாமங்கலம் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை முதலிய லயக்கலை வித்வான்களால் பெரிதும் மதிக்கப்பெற்றவர். ஒழுக்கத்திலும் பண்பாட்டிலும் உயர்ந்தவர். பரத நாட்டியத்தில் வழுவூர் பாணி பிரசித்தி யடைவதைப் பார்த்து மகிழ்ந்து விட்டு, எழுபத்தேழாவது வயதில், பழுத்த பழமாகிக் காலஞ் சென்றார். அவருடைய குடும்பத்தாருக்கும் அவருடைய சீடர் ஸ்ரீ ராமய்யாப் பிள்ளைக்கும் நமது மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## மேஜர் மேஸ்ட்ரோ



5 வால்வுகள் AC & AC/DC உறுதியான வால்நட் பெட்டி. தூக்கிப்போகும் கைப்பிடியுடன்.

# பைலட் ரேடியோக்கள்

## ஒரே தரமான சிறப்பு



உங்கள் அருகாமையிலுள்ள ரேடியோ வியாபாரியிடம் காணுங்கள்.



பாண்ட்ஸ்ப்ரெட் மாடல் BS 617
6 வால்வுகள் AC அழகான வால்நட் பெட்டி

சமஸ்தானங்கள் உள்பட சென்னை ராஜ்யத்துக்கு ஏகபோக பாக்டரி பிரதிநிதிகள்:

**இந்தியா ப்ருடென்ஷியல் மெர்க்கன்டைல்ஸ்**
தபால் பெட்டி நெ. 710 சென்னை - 6

# அலை ஓசை

☆ ☆ ☆ ☆ ☆ ☆ கல்கி ☆ ☆ ☆ ☆ ☆ ☆

### இருபத்தோராம் அத்தியாயம்

## குற்றச் சாட்டு

ஆக்ரா ரயில்வே ஸ்டேஷன் அமளி துமளிப்பட்டுக் கொண்டிருந்தது. வருகிற ரயில்களும் போகிற ரயில்களும் ஏகச் சத்தமிட்டன. பிரயாணிகளின் கூட்டம் சொல்லி முடியாது. ரயில்களிலும் சரி, ரயில்வே பிளாட்பாரத்திலும் சரி, காலி இடம் என்பதே கிடையாது. பிரயாணிகளில் பாதிப்பேர் சோல்ஜர்களும் சிப்பாய்களுமாவர். அப்போது உலக மகாயுத்தம் மிக நெருக்கடியை அடைந்திருந்த சமயம் அல்லவா? மாஜி சேனாதிபதி வேவல் இந்தியாவின் வைஸ்ராய் பதவியை வகித்து வந்தார். அது வரையில் அவர் சென்றிருந்த போர்க்களத்திலெல்லாம் பிரிட்டிஷ் படைகள் பின்வாங்க வேண்டி நேர்ந்தது. அந்த அபகீர்த்தியைப் போக்கிக் கொள்ள விரும்பிய வேவல் துரை என்ன வந்தாலும் இந்தியாவிலிருந்து பின்வாங்குவதில்லையென்று தீர்மானித்துப் பிரமாத ராணுவ முஸ்தீப்புகளைச் செய்துவந்தார். ஆகவே இந்தியாவின் ரயில்கள் எல்லாம் அந்த 1943-ம் வருஷம் பிற்பகுதியில் ஒரே சோல்ஜர்கள் மயமாயும் சிப்பாய்கள் மயமாயும் இருந்தன. ஸ்டேஷன் பிளாட்பாரங்களில் பெரிய பெரிய வெடிகுண்டுகளும் அவற்றின் கூடுகளும் கும்பலாக அடுக்கப்பட்டுக் கிடந்தன!

பல ரயில் பாதைகள் சந்திக்கும் பெரிய ஜங்ஷன் ஆக்ரா; ஆதலால் அங்கே இடைவிடாமல் ரயில்கள் வந்த வண்ணமும் போன வண்ணமுமாக இருந்தன.

இரண்டாவது வகுப்புப் பிரயாணிகளுக்குரிய வெயிடிங் ரூமில் ஒரு மூலையில் சீதா உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு அருகில் ஒரு சிறிய டிரங்குப் பெட்டி இருந்தது. அதன்மேல் கையை ஊன்றிச் சாய்ந்துகொண்டிருந்தாள். அவளுடைய மனம் எங்கெல்லாமோ சஞ்சரித்துக் கொண்டிருந்தது.

ஐந்து வருஷத்துக்கு முன்னால் அதே ஆக்ராவுக்குச் சீதா தன் கணவருடனும் சூரியாவுடனும் வந்திருந்தாள். கோட்டையிலிருந்த அரண்மனைகளையும் தாஜ்மகாலையும் பார்த்துப் பரவசமடைந்தாள். பற்பல இன்பக் கனவுகள் எல்லாம் கண்டாள்.

அந்தக் கனவுகளையெல்லாம் விட அதிசயமான நிகழ்ச்சி நேற்று நடந்தது. சில மணி நேரம் அவள் தன்னை அரண்மனையில் வாழ்வதற்குரிய அரசகுமாரி என்று எண்ணிப் பெருமித ஆனந்தம் அடைந்திருந்தாள். ஆனால் அந்தப் பெருமித ஆனந்தம் ஒரு நொடியில், ஒரு வார்த்தையில் தகர்ந்துபோய் விட்டது. அவள் வெறும் சீதாதான் என்றும் சாதாரண மனுஷிதான் என்றும் ஏற்பட்டது. அவளை அவ்விதம் மதிமயங்கச் செய்வதற்குக் காரணமாயிருந்தவர்கள் ஆக்ரா ஸ்டேஷனில் அவளைக் கொண்டுவந்து விட்டுவிட்டு, டில்லிக்கு ஒரு இரண்டாம் வகுப்பு டிக்கட்டும் வாங்கிக் கொடுத்துவிட்டு, மாயமாய் மறைந்து விட்டார்கள். ஆம், வெறும் டிக்கட் மட்டும் கொடுத்து விட்டுப் போகவில்லை. அந்தச் சிறு டிரங்குப் பெட்டியையும் கொடுத்து விட்டுப் போனார்கள். அவளுக்கு ஏற்பட்ட கஷ்டத்துக்குப் பரிகாரமாக அதில் ஏதோ பரிசுப் பொருள் இருக்கிறதாம். ராணி அம்மாள் கொடுக்கச் சொன்னாளாம். ஆகா! அந்த ராணி அம்மாளின் பரிசு இங்கே யாருக்கு வேணும்? வேண்டாம் என்று சொன்

னாலும் கேட்காமல் அவர்கள் வைத்து விட்டுப் போய் விட்டார்கள்.

அதில் சீதாவுக்குச் சிரத்தையில்லாதபடியால் பெட்டியைத் திறந்து அதற்குள் என்ன இருக்கிறது என்று கூட அவள் பார்க்கவில்லை.

சீதாவின் உள்ளம் அவளுடைய வருங்கால வாழ்வில் ஈடுபட்டிருந்தது. அவளிடம் டில்லிக்கு டிக்கட் இருப்பது உண்மைதான். டில்லிக்குப் போகும் வண்டியும் சீக்கிரத்தில் வந்து விடும். ஆனால் டில்லிக்குப் போய் என்ன செய்வது? அவருடைய முகத்தில் எப்படி விழிப்பது? "இரண்டு நாளாய் எங்கே போயிருந்தாய்?" என்று கேட்டால் என்ன பதில் சொல்வது? ஏற்கெனவே காரணமில்லாமல் தன் மீது எரிந்து விழுந்து கொண்டிருந்தவர் இப்போது தன்னை அடியோடு நிராகரித்து விடலாம் அல்லவா? சூரியாவோடு சேர்ந்து ஏதோ சதி செய்ததாக எண்ணிக் கொண்டிருக்கலாமல்லவா? அப்படி எண்ணிக் கொண்டிருந்தால் தன்னை எப்படி அவர் திரும்ப ஏற்றுக் கொள்வார்? நடந்த சம்பவங்களை எல்லாம் சொன்னால் உண்மையென்று நம்புவாரா? கட்டுக்கதை என்று சொல்ல மாட்டாரா? எல்லாவற்றையும் அநுபவித்த தனக்கே நடந்ததை நம்புவது கஷ்டமாயிருக்கிறதே! அவர் எப்படி நம்புவார்? அவரை விட்டுப் போய் விடுவது என்று முன்னால் உத்தேசித்திருந்தபடி செய்து விட்டால் என்ன? அப்படியானால் எங்கே போவது? சென்னைப் பட்டணத்தில் வஸந்தி இருக்கிறாள். ஆனால் அங்கே போய் மாமனார் மாமியார் முகத்தில் எப்படி விழிக்கிறது? திடீரென்று தனியாக வந்ததற்கு என்ன காரணம் சொல்லுகிறது? அதைக் காட்டிலும் சூரியா சொன்னபடி கல்கத்தாவுக்குப்போவது நல்லது. கல்கத்தாவில் லலிதாவின் சிநேகிதி இருக்கிறாள் அல்லவா? அவள் வீட்டுக்குப் போய் அங்கிருந்தபடி யோசித்து முதலில் சென்னைக்குக் கடிதம் எழுத வேண்டும். அங்குள்ள நிலைமையைத் தெரிந்து கொண்டு போவதுதான் உசிதமாயிருக்கும். ஆனால் பிற்பாடுதான் மதராஸுக்கு எதற்காகப் போக வேண்டும்? கல்கத்தாவில் சுதந்திரமாய் வாழ்வதற்கு ஒரு வேலை தேடிக் கொள்வதுதான் சரி. எத்தனையோ ஸ்திரீகள் இந்தக் காலத்தில் உத்தியோகம் பார்த்துக் கொண்டு சுதந்திரமாய் இருக்கிறார்கள். அதுபோல் தானும் ஜீவனத்துக்கு ஒரு வேலை தேடிக் கொண்ட பிறகு வஸந்திக்குக் கடிதம் எழுதி வரவழைத்துக் கொண்டால் என்ன?......

இவ்விதம் சீதாவின் உள்ளம் டில்லிக்கும், சென்னைக்கும், கல்கத்தாவுக்கும் இடையே ஊசலாடிக் கொண்டிருக்கையில், அந்த வெயிடிங் ரூம் வாசலில் நின்று கொண்டிருந்த ஒரு முகம் சட்டென்று அவள் கண்ணில் பட்டுக் கருத்தைக் கவர்ந்தது. அப்படிப் பார்த்தவர் ஒரு முகம்மதியர். சுமார் ஐம்பது வயதுள்ள மனிதர். அவரை எப்போதோ எங்கேயோ பார்த்திருந்த ஞாபகம் சீதாவுக்கு வந்தது. அதனால் ஒரு விதப் பயம் உண்டாயிற்று. தான் அவரைப் பார்த்த சமயத்தில் தன்னை அவர் உற்றுப் பார்க்கிறார் என்று தெரிந்ததும் சீதாவின் பீதி அதிகமாயிற்று. முன்னால் இவரை எங்கே பார்த்திருக்கிறோம் என்ற யோசனை முற்றியது. தலைவலி எடுக்கும்வரை யோசித்த பிறகு சட்டென்று ஞாபகம் வரவும் செய்தது. கையில் ரத்தம் தோய்ந்த கத்தியுடன் ரஸியா பீகம் என்னும் ஸ்திரீ ஒரு நாள் இரவு ஒருவருக்கும் தெரியாமல் வீட்டில் புகுந்து ஸ்நான அறையில் தண்ணீர்க் குழாயைத் திறந்து விட்டிருந்தாள் அல்லவா? அந்தப் பயங்கரமான இரவில் தான் படுத்துத் தூக்கமின்றிப் புரண்டு கொண்டிருந்தபோது பலகணிக்கு வெளியேயிருந்து ஒரு முகம் தன்னையும் தாரிணியையும் உற்றுப் பார்த்ததல்லவா? நிலைக் கண்ணாடியில் தான் அந்த முகத்தைப் பார்த்து விட்டுத் திடுக்கிடவில்லையா? அந்த மாதிரியல்லவா இருக்கிறது இந்த சாயபுவின் முகமும்? ஒருவேளை அவரே தானோ? அப்படியானால் எதற்காக இங்கே வந்திருக்கிறார்? தன்னை எதற்காக வெறித்துப் பார்க்கிறார்?

ஆக்ரா மிகவும் பொல்லாத ஊர் என்று சீதா அடிக்கடி கேள்விப்பட்டிருந்தாள். பாதுகாப்பில்லாமல் அஜாக்கிரதையாயுள்ள ஸ்திரீகளைப் பிடித்

தூக் கொண்டுபோய் விற்றுவிடக் கூடிய பாதகர்கள் அந்த ஊரில் உண்டு என்றும் கேள்விப்பட் டிருந்தாள். இதற்கு முன்னால் தனக்கு நேர்ந்த கஷ்டமெல்லாம் போதாது என்று இன்னமும் கஷ்டம் ஏதேனும் காத் திருக்கிறதோ? ஆனால் இது ரயில்வே ஸ்டேஷன். இரவும் பகலும் ஆயிரக் கணக்கான ஜனங்கள் நடமாடிக் கொண்டிருக்கும் பொது ஸ்தலம். இங்கே தன்னை யார் என்ன செய்ய முடி யும்? எதற்காகப் பயப்பட வேண்டும்? ஸ்திரீகள் தனியாகப் பிரயாணம் செய் வதற்குப் பயந்திருந்த காலம் எல்லாம் போய்விட்டது. இப்போது எத்த னையோ பெண்கள் தன்னந்தனியாக இந்தியா தேசமெங்கும் பிரயாணம் செய்து விடுகிறார்கள். மதராஸிலிருந்து டில்லிக்கும் பம்பாயிலிருந்து கல்கத்தா வுக்கும் தனக்குத் தெரிந்த குடித்தன ஸ்திரீகள் எத்தனையோபேர் போயிருக் கிறார்கள்! பின்னே எதற்காகப் பயப் படவேண்டும்?

பயப்படக் காரணம் இல்லைதான். ஆனாலும் கல்கத்தாவுக்கோ மதரா ஸுக்கோ போவதைக் காட்டிலும் இட்டத்திலுள்ள டில்லிக்குப்போவதே நல்லது. தனக்கு நேர்ந்த அநுபவங்களை இவர் நம்பினாலும் நம்பாவிட்டாலும் சொல்லிவிட வேண்டும். சூரியாவின் கதி என்ன ஆயிற்று என்பதையாவது தெரிந்து கொள்ள வேண்டாமா?...

ஏதோ ஒரு ரயில் ராட்சத கர்ஜனை செய்துகொண்டு ஸ்டேஷன் பிளாட் பாரத்திற்குள் வந்தது. "டில்லி ரயில் வந்துவிட்டது!" என்று சொல்லிக் கொண்டு வெயிடிங் ரூமில் இருந்தவர் களில் சிலர் எழுந்து போனார்கள். சீதாவும் அவசரமாக எழுந்து டிரங் குப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு வெளியே வந்தாள். வாசற்படிக்கருகில் நின்ற சாயபுவைப் பார்க்கக்கூடாது என்ற உறுதியினால் வேறு பக்கம் பார்த்துக்கொண்டு சென்றாள். ஆனால் அந்த சாயபுவின் செக்கச் சிவந்த உற்றுப் பார்க்கும் கண்கள் தன் பேரில் பதிந்திருக்கின்றன என்று அவ ளுடைய உள்ளுணர்ச்சி அறிவித்தது.

டில்லி ரயில் இது என்று தெரிந்து கொண்டதும், இரண்டாம் வகுப்பு வண்டிகளில் பெண்கள் வண்டியைத் தேடிப் பிடித்தாள். ஆனால் அந்த வண்டியில் பெண்களின் கூட்டம் ஏற் கெனவே அதிகமா யிருந்தது. புதிதாக ஏறப் பார்த்த சீதாவுக்கு அந்த ஸ்திரீ கள் இடங் கொடுக்க மறுத்தார்கள். கதவை உட்புறம் தாளிட்டுக்கொண்டு திறக்க முடியாது என்று சொல்லி விட்டார்கள். பிறகு சீதா அதிக கூட்டமில்லாத வேறொரு இரண்டாம் வகுப்பு வண்டியைத் தேடிப்போனாள். முக்கியமாக, சோல்ஜர்களும் சிப்பாய் களும் இல்லாத வண்டியாகத் தேடி னாள். அத்தகைய கட கடத்த ஓட்டை உடைசல் வண்டி ஒன்று தென் பட்டது. அதில் அதிக ஜனங்கள் இல்லை என்பதைப் பார்த்து விட்டு ஏறினாள். ஏறி உட்கார்ந்ததும் அதே வண்டியில் ஏற்கெனவே அந்த முகம் மதியர் ஏறி யிருப்பது தெரிந்து திடுக் கிட்டாள். ஐயோ! இது என்ன? போயும் போயும் இதில் ஏறினோமே? யாரைப் பார்க்க வேண்டாம் என்று நினைத்தோமோ, அந்த மனிதன் இங்கு உட்கார்ந்திருக்கிறானே? இறங்கி வேறு வண்டி பார்க்கலாமா? இறங்கி ஏறு வதற்கு நேரம் இருக்கிறதோ, என் னமோ, தெரிய வில்லையே?

இப்படிச் சீதா தத்தளித்துக் கொண் டிருக்கையில் இரண்டு மனிதர்கள் அந்த வண்டி யண்டை வந்து நின் றார்கள். ஒருவன் இன்னொருவனுக்குச் சீதாவைச் சுட்டிக் காட்டினான்.

இரண்டாவது மனிதன் சீதாவை உற்றுப் பார்த்து விட்டு, "அம்மா! உன் பக்கத்தில் இருக்கிற பெட்டி உன் னுடையதா?" என்று கேட்டான்.

"என்னுடையதுதான்; எதற்காகக் கேட்கிறாய்?" என்றாள் சீதா. அவ ளுக்கு ஒரு பக்கம் கோபம் வந்தது; இன்னொரு பக்கம் ஏதோ அபாயம் வரப் போகிறது என்ற உணர்ச்சி யினால் மனம் பதைபதைத்தது.

"உன்னுடையதா? நிச்சயந்தானா?"

"நிச்சயந்தான்!"

"அப்படியானால் ரயிலை விட்டுக் கீழே இறங்கு!" என்றான் அந்த மனிதன். உடனே ஒரு விஸிலை எடுத்து ஊதினான். இரண்டு ரயில்வே போலீஸ்காரர்கள் வந்து நின்றார்கள்.

"உம்; இறங்கு!" என்று அதிகாரத் தொனியில் கட்டளையிட்டான்.

இச்சமயத்தில் ஒரு ரயில்வே உத்தியோகஸ்தர் அந்தப் பக்கம் வந்தார். சீதா, "ஸார்!" என்று அவரை அழைத்து, "இவர்கள் என்னைத் தொந்தரவு செய்கிறார்கள். நீங்கள் உதவி செய்ய வேண்டும்!" என்றாள்.

அவர் போலீஸ்காரர்களைப் பார்த்து "என்ன சமாசாரம்?" என்று விசாரித்தார். சாதாரண உடுப்பில் இருந்த போலீஸ்காரன் "இந்த அம்மாள் இவருடைய பெட்டியைத் திருடியிருக்கிறாள். திருடியதோடு தன்னுடையது என்று சாதிக்கிறாள்!" என்றான்.

ரயில்வே உத்தியோகஸ்தர் சீதாவைப் பார்த்து, "இவர்கள் உன்பேரில் குற்றம் சாட்டுகிறார்கள், அம்மா! ரயில்வே போலீஸ் ஸ்டேஷன் அதோ பக்கத்தில்தான் இருக்கிறது! நீ அங்கே போய் இன்ஸ்பெக்டரிடம் உண்மையைச் சொல்லு! உனக்குக் கெடுதல் ஒன்றும் வராது! இவர்கள் சாட்டும் குற்றம் பொய் என்றால், இன்ஸ்பெக்டர் உன்னை விட்டு விடுவார். அடுத்த வண்டியில் நானே உன்னை ஏற்றி விடுகிறேன்!" என்றார். போகும்போது அவர், "இந்தக் காலத்தில் யாரையும் நம்புவதற்கில்லை. பார்வைக்குப் பரம சாதுவாய்த் தோன்றுகிறார்கள். ஆனால் காரியம் நேர் விரோதமாயிருக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே போனார்.

வேறு வழியில்லை யென்று கண்டு சீதா வண்டியை விட்டுக் கீழே இறங்கினாள். வெளிப்படையாகத் துணிச்சல் காட்டி, "வாருங்கள்! உங்கள் இன்ஸ்பெக்டரிடமே சொல்லுகிறேன். இந்த அநியாயத்துக்குப் பரிகாரம் கேட்கிறேன்!" என்றாள். மூன்றும் பின்னும் போலீஸ் புடைசூழச் சென்ற போது சீதாவின் உள்ளம் பதை பதைத்தது. பயத்தினால் அவளுடைய கால்கள் தள்ளாடித் தத்தளித்தன. ஆனாலும் அவள் மனதில் ஒரு சிறு ஆறுதலும் தோன்றியது. நல்லவேளை! அந்தக் கொள்ளிக்கண் சாயபு இருந்த வண்டியிலிருந்து இறங்கித் தப்பித்துக் கொண்டோமல்லவா? இதுவும் ஒரு நல்லதற்குத்தான்.

போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் உண்மையைச் சொன்னால் இந்த அதிகப்பிரசங்கிகள் தன்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டியதாகும். அடுத்த வண்டியில் ஏறிக் கொண்டு போனால் போகிறது.

சாயபுவிடமிருந்து தப்பினோம் என்ற சந்தோஷமானது சீதாவைத் திரும்பிப் பார்த்து அதை உறுதி செய்து கொள்ளும்படி தூண்டியது. சீதா திரும்பிப் பார்த்தாள்.

ஆகா! இது என்ன! ஆபத்து இன்னமும் தன்னை விட்டபாடாக இல்லையே? அந்தச் சாயபுவும் ரயிலிலிருந்து இறங்கிச் சற்றுத் தூரத்தில் தொடர்ந்து வருகிறானே? ஐயோ! எதற்காக அவன் வருகிறான்? தன்னை என்ன செய்வதற்காக வருகிறான்?

## இருபத்திரண்டாம் அத்தியாயம்

# விடுதலை

மறுநாள் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் சீதா திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டுக் கைதிக்கூண்டில் நின்றாள். அவளுடைய சித்தம் தன் சுவாதீனத்தை இழந்து பிரமை கொள்ளும் நிலைக்கு வந்திருந்தது.

அரண்மனைச் சிங்கார வனத்தில் நடந்த சம்பவங்களைக் காட்டிலும் நேற்றிலிருந்து நடந்த சம்பவங்கள் அவளுடைய சுயபுத்தியைக் கொண்டு நம்ப முடியாதனவாயிருந்தன.

முந்தாநாள் அவள் புராதனமான ராஜகுலத்தில் பிறந்த அரசிளங்குமரிதான் என்று கொஞ்ச நேரம் எண்ணிப் பெருமிதம் கொண்டிருந்தாள்.

இன்றைக்கு அவள் ரயில்வே ஸ்டேஷனில் பெட்டி திருடியதாகக் குற்றம் சாட்டப் பட்டு மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் நிறுத்தப் பட்டிருந்தாள்.

விசாரணை நடந்து கொண்டிருந்தது. பிராஸிக்யூஷன் தரப்பில் மூன்று நபர்கள் சாட்சிக்கூண்டில் ஏறிச் சாட்சி சொல்லி விட்டார்கள்.

மூன்று சாட்சிகளில் ஒருவன் அப்பெட்டியின் 'சொந்தக்காரன்' என்று தன்னைச் சொல்லிக் கொண்டான்.



ஆக்ரா ஜங்ஷன் பிளாட்பாரத்தில் இருந்த ஒரு பெஞ்சியில் தான் பெட்டியுடன் உட்கார்ந்திருந்ததாகவும், தாகம் எடுத்து ஒரு கப் 'சா' குடிப்பதற்குப் போயிருந்ததாகவும், திரும்பி வந்து பார்க்கும் போது பெட்டியைக் காணோம் என்றும், அப்புறம் டில்லி ரயிலில் இந்த அம்மாள் பெட்டியுடன் உட்கார்ந்திருந்ததைக் கண்டு பிடித்ததாகவும் அவன் சொன்னான். இந்தப் பெரும் பொய்யனுடைய பெயர் லாலா சத்தியப் பிரகாஷ் குப்தா என்று தெரிந்தபோது சீதா தன் நம்பமுடியாத பயங்கர நிலைமையிலும் புன்னகைகொள்ளாமலிருக்க முடியவில்லை.

இன்னொரு சாட்சி, மேற்படி லாலா சத்யப் பிரகாஷினால் அழைத்து வரப்பட்ட போலீஸ் சேவகன். சத்தியப்பிரகாஷ் புகார் செய்ததின் பேரில் குற்றவாளி ஸ்திரீயை ரயிலிலிருந்து பெட்டி சகிதமாக இறக்கி ரயில்வே போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துப் போனதாக அவன் சாட்சி கூறினான்.

அடுத்தபடியாக மேற்படி போலீஸ் ஸ்டேஷனில் அச்சமயம் இருந்த போலீஸ் இன்ஸ்பெக்டர் சாட்சியம் கூறினார். "இந்த அம்மாள் பெட்டி திருடியிருப்பாள் என்பதை முதலில் நான் நம்பவில்லை. ஆனால் சத்தியப் பிரகாஷ் வற்புறுத்திச் சொன்னதின் பேரில் இந்த ஸ்திரீயிடம் 'பெட்டி உன்னுடையதுதானே? அப்படியானால் அதில் என்ன சாமான்கள் இருக்கின்றன?' என்று கேட்டேன். இந்த ஸ்திரீ பதில் ஒன்றும் சொல்லாமல் திகைத்து நின்றாள். ஆனால் சத்தியப் பிரகாஷ் குப்தா பெட்டியில் இருக்கும் சாமான்களுக்கு ஜாபிதா கொடுத்தான். சாவியும் அவனிடந்தான் இருந்தது. திறந்து பார்த்தால் அவன் சொன்ன சாமான்கள் எல்லாம் இருந்தன. இந்த அம்மாள் தன்னைப் பற்றி வேறு தகவல்களும் சரியாகக் கொடுக்கவில்லை. விலாசம் சொல்லக் கூட மறுத்துவிட்டாள். ஆகையால் என்னுடைய முதல் எண்ணத்தை மாற்றிக்கொண்டு வழக்குப் பதிவு செய்தேன்" என்று இன்ஸ்பெக்டர் சாட்சி சொன்னார்.

இதை யெல்லாம் சீதா கேட்டுக் கொண்டிருந்தாள். அந்த இன்ஸ்பெக்




டர் கூறியதெல்லாம் உண்மைதான். பெட்டியில் என்ன இருந்தது என்பது தனக்கு உண்மையில் தெரியாது; ஆகையால் சொல்ல முடியாமல் திகைக்க நேர்ந்தது. தன்னுடைய சொந்த விலாசத்தைக் கொடுக்கவும் அவளுக்கு இஷ்டமில்லை. இந்த அவமானம் வேறு அவருக்கு வரவேண்டுமா என்றுதான் சொல்லவில்லை. தான் குற்றமற்றவள்; நிரபராதி. இதை எப்படியும் நிரூபித்து விடலாம். நிரூபித்து விடுதலை பெறுவது நிச்சயம். பின் எதற்காகத் தன் கணவரை இந்த வெட்கக் கேட்டில் சம்பந்தப் படுத்த வேண்டும்?

ஆனால் எப்படி நிரூபிப்பது? தான் குற்றமற்றவள் என்பதை எவ்விதம் நிரூபிப்பது? அதற்கு வழி எவ்வளவு யோசித்தும் புலப்படவில்லை. தன்னுடைய கதையை யார் நம்புவார்கள்?

அந்தக் கோர்ட்டிலிருந்த வயோதிகரான வக்கீல் ஒருவர் சீதாவின் பேரில் கருணை கொண்டு அவளுடைய கட்சியை எடுத்துப் பேசுவதற்கு ஒப்புக்கொண்டார். தம்மிடம் உண்மையைச் சொல்லும்படி சீதாவைக் கேட்டார். சீதா உண்மையில் நடந்ததையெல்லாம் சொன்னாள். ஆனால் அவர் ஒரேயடியாகத் தலையசைத்தார். "கதை ஜோடிக்கும் சாமர்த்தியம் உன்னிடம் அபாரமாயிருக்கிறது. எழுதும் சக்தியும் இருந்தால் பிரபல ஆசிரியை ஆகலாம். ஆனால் கோர்ட்டில் இந்தக் கதையை யாரும் நம்பமாட்டார்களே!" என்றார். அவருக்கு நம்பிக்கை உண்டாகும்படி எதையாவது கற்பனை செய்து சொல்லும் சக்தி அச்சமயம் சீதாவிடம் இல்லை. அவளுடைய அறிவு குழம்பித் தத்தளித்துக் கொண்டிருந்தது. அடிக்கடி தலை சுற்றியது. எனவே வேறு ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆகவே அந்த வக்கீல் "பெட்டி எப்படிக் கிடைத்தது என்று நீ உண்மையைச் சொல்ல மறுக்கிறாய்! நான் என்ன செய்யட்டும்? முடிந்த வரையில் முயன்று பார்க்கிறேன்!" என்றார். அவ்வாறே அவரால் முடிந்த வரையில் முதல் மூன்று சாட்சிகளையும் குறுக்கு விசாரணை செய்து பார்த்தார். ஆனால் ஒன்றும் பயன் தரவில்லை. குற்றவாளிக்குச் சாதகமாக அந்தச் சாட்சி

களின் வாய் மொழியிலிருந்து எதுவும் வெளியாகவில்லை.

முதல் மூன்று சாட்சிகளின் விசாரணை முடிந்து விட்டது. பிராஸிக்யூஷன் தரப்பில் இன்னும் ஒரே ஒரு சாட்சி பாக்கி இருந்தது.

ஆனால் மாஜிஸ்ட்ரேட் அவசரப்பட்டார். "இன்னும் எதற்காகச் சாட்சியம்? கேஸ் தெளிவாக இருக்கிறதே!" என்று சொன்னார்.

பிராஸிக்யூஷன் தரப்பில் கேஸ் நடத்திய போலீஸ் வக்கீல், "கொஞ்சம் பொறுத்துக் கொள்ள வேண்டும். நாலாவது சாட்சி திருட்டைக் கண்ணால் பார்த்த சாட்சி" என்றார்.

உடனே, அந்தக் கிராதக சாயபு சாட்சிக் கூண்டிற்கு வந்து நின்றான்.

சீதாவின் பயமெல்லாம் உண்மையாகி விட்டது. "இவன் எதற்காகத் தொடர்ந்து வருகிறான்?" என்று முதல் நாள் இரவு சீதா கேட்டுக் கொண்ட கேள்விக்குப் பதில் கிடைத்துவிட்டது. தன் குடியைக் கெடுப்பதற்குத்தான்! பொய்ச் சாட்சி சொல்லித் தன்னைத் திருடி என்று நிரூபிப்பதற்குத்தான்! அட பாவி! உனக்கு நான் என்ன தீங்கு செய்தேன்? நீ யார் என்பது கூட எனக்குத் தெரியாதே! எதிர் பாராத எத்தனையோ கஷ்டங்களுக்கு உள்ளான இந்தத் துர்ப்பாக்கியசாலியின் தலையில் இப்படிக் கடைசியாக பெரிய கல்லைத் தூக்கிப் போட்டுக் கொல்லப் பார்க்கிறாயே?

அந்தக் கிராதக சாயபு "சர்வ வல்லமையுள்ள ஆண்டவன் சாட்சியாக உண்மையையே சொல்வேன்" என்று சத்தியப் பிரமாணம் செய்தார். பிறகு போலீஸ் தரப்பு வக்கீலின் கேள்விகளுக்குப் பதில் சொன்னார். இரண்டாவது மூன்றாவது கேள்விகளுக்கு அவர் கூறிய பதில்கள் கோர்ட்டில் பெருங் கிளர்ச்சியை உண்டாக்கி விட்டன.

"இந்த ஸ்திரீ பெட்டியைத் திருடி எடுத்துச் சென்றதை நீர் கண்ணால் பார்த்தீர் அல்லவா?"

"இல்லை; நான் பார்க்கவில்லை."

"ஓஹோ! இது என்ன? நீர் பார்க்கவில்லை யென்றால், பின்னே இவள் திருடினாள் என்பது உமக்கு எப்படித் தெரியும்? அப்படி அனுமானிப்பதற்கு வேறு காரணம் உண்டா?"

"இல்லை; அப்படி அனுமானிப்பதற்கு எவ்விதமான காரணமும் இல்லை! இந்த அம்மாள் பெட்டியைத் திருடவில்லை என்பது எனக்கு நிச்சயமாய்த் தெரியும்!"

தன் காதில் விழுவது உண்மைதானா என்று சீதா அதிசயித்தாள்.

லாலா சத்தியப் பிரகாஷ் குப்தாவின் முகம் வெளுத்தது.

போலீஸ்காரர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தார்கள்.

மாஜிஸ்ட்ரேட் கவனமாகக் காது கொடுத்துக் கேட்கத் தொடங்கினார்.

சீதாவின் கட்சி பேசிய வக்கீலின் முகம் பிரகாசம் அடைந்து மலர்ந்தது.

போலீஸ் வக்கீல் போலீஸ் அதிகாரியுடன் ஏதோ பேசிவிட்டு, "இந்தச் சாட்சி விரோதமாய்த் திரும்பிவிட்டபடியால் விசாரணையை நிறுத்திக் கொள்கிறேன்" என்றார்.

குற்றவாளி தரப்பு வக்கீல் குதித்து எழுந்து, "நான் சில கேள்விகள் கேட்கக் கோர்ட்டார் அனுமதி கொடுக்க வேண்டும்" என்றார்.

மாஜிஸ்ட்ரேட்டுக்கும் உண்மையை அறியும் ஆர்வம் ஏற்பட்டிருந்தது. கேள்வி கேட்க அனுமதித்தார்.

"ஜனாப் இந்த ஸ்திரீ திருடவில்லையென்று நிச்சயமாய்த் தெரியும் என்று சொன்னீரே? நிச்சயமாக எப்படித் தெரியும்?"

"உண்மையில் பெட்டியைத் திருடியது யார் என்று எனக்கு நிச்சயமாய்த் தெரியும். அதனால்தான் இந்த அம்மாள் திருடவில்லை என்று சர்வ நிச்சயமாய்ச் சொன்னேன்."

கோர்ட்டில் பரபரப்பு அதிகமாயிற்று. கசமுச வென்று பேசும் சத்தம் எழுந்து உடனே அடங்கிவிட்டது.

"உண்மையில் பெட்டியைத் திருடியது யார்?" என்று வக்கீல் கேட்டார்.

முகம்மதியர் பதில் சொல்லத் தயங்கினார்.

"சத்தியப் பிரகாஷ் குப்தாவா?"

"இல்லை!"

"பின்னே யார்?"

"நான்தான்!"

"என்ன? நன்றாய்ச் சொல்லும். கோர்ட்டாரின் பக்கம் பார்த்துச் சத்தியமாய்ச் சொல்லும்."

"பெட்டியைத் திருடியவன் நான் தான். பெட்டியை எடுத்துப் போய் நான் முதலில் ஒரு வண்டியில் ஏறிக் கொண்டேன். அதே வண்டியில் பிற்பாடு அந்த அம்மான் வந்து ஏறினான். நான் திருடி வந்த பெட்டிக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான்......"

இந்தச் சமயத்தில் போலீஸ் வக்கீல் மேற்படி சாட்சியத்தை ஆட்சேபிக்க எழுந்தார். மாஜிஸ்ட்ரேட் அவரை உட்காரும்படி உத்தரவிட்டார்.

"போலீஸாரிடம் நேற்று இரவு நீர் எழுதிவைத்த வாக்குமூலத்தில் இந்த அம்மான் திருடியதைக் கண்ணால் பார்த்ததாக எழுதி வைத்தீர் அல்லவா! அது ஏன்?"

"சத்தியப் பிரகாஷ் குப்தா அவ்விதம் சொல்லும்படி கேட்டுக் கொண்டான். சொன்னால் ஐந்நூறு ரூபாய் தருவதாகவும் ஒப்புக் கொண்டான்."

"பின் எதனால் இப்போது மாறி உண்மையைச் சொன்னீர்?"

"இந்த சாட்சிக்கூண்டில் ஏறி அல்லாவின் பெயரால் பிரமாணம் எடுத்துக் கொண்ட பிறகு பொய் சொல்ல மனம் துணியவில்லை. இந்த அம்மானுக்குச் செய்த அநீதிக்குப் பரிகாரமாக உண்மையைச் சொன்னேன்."

"ஆனால் இந்த ஸ்திரீ பெட்டி தன்னுடையது என்று போலீஸாரிடம் சொன்னாளே, அது ஏன்?"

"இந்த அம்மான் போலீஸாரிடம் என்ன சொன்னாளோ, எனக்கு அது தெரியாது. இந்த அம்மானைப் பார்த்தாலே ஒரு மாதிரி பிரமை பிடித்திருக்கிறது என்று தெரிகிறது. பிரமையில் ஏதாவது சொல்லியிருக்கலாம்."

போலீஸ் வக்கீல் எழுந்து தன்னுடைய வாதத்தை எடுத்துரைத்தார். மாறிச் சாட்சி சொன்ன முகம்மதியரின் விஷயத்தில் ஏதோ மர்மம் இருக்கிறது என்றும் அதை நம்பித் தீர்ப்பு அளிக்கக்கூடாது என்றும் கூறினார்.

சீதாவின் வக்கீல் சுருக்கமாகத் தம்முடைய வாதத்தைச் சில வார்த்தைகளில் முடித்துக் கொண்டார்.

மாஜிஸ்ட்ரேட் தமது தீர்ப்பில் கூறியதாவது:—

"முகம்மதியரின் விஷயத்தில் ஏதாவது மர்மம் இருக்கலாம். அது விஷயம் போலீஸார் கவனித்துக் கொள்ள வேண்டியது. ஆனால் அவர் கூறிய சாட்சியத்தில் மர்மம் எதுவும் இடையாது. மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார். அதனால் மற்றச் சாட்சிகள் அடிபட்டுப் போகின்றன. இந்த அம்மான் மீது பிராது கொடுத்த சத்தியப் பிரகாஷ் என்பவன் முதல் நம்பர் அயோக்யன் என்பதற்கு அவனுடைய முகத் தோற்றமே சாட்சியம் அளிக்கிறது. இந்த ஸ்திரீக்குக் கொஞ்சம் சித்தப் பிரமை இருக்கிற தென்பதும் தான் சொல்வது இன்ன தென்பதை நன்றாய்த் தெரிந்து சொல்லும் சக்தி இல்லையென்பதும் தெளிவாயிருக்கின்றன. இந்தக் காரணங்களால் வழக்கைத் தள்ளுபடி செய்து குற்றவாளியை விடுதலை செய்கிறேன்."

இவ்விதம் தீர்ப்புக் கூறி விட்டு, மாஜிஸ்ட்ரேட்டு சீதாவின் கட்சியைப் பேசிய வக்கீலைப் பார்த்து "இந்த ஸ்திரீயின் பாதுகாப்புக்கு ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டும். இவள் யார், எந்த ஊர் என்பதைக் கண்டு பிடித்து இவளுடைய சொந்தக்கார மனுஷர்களிடம் சேர்ப்பிக்கவேண்டும். அதுவரையில் இந்த நகரிலுள்ள அநாதை ஆசிரமத்திலாவது வேறு தகுந்த ஸ்தாபனத்திலாவது இவளை விட்டு வைப்பது நல்லது" என்றார்.

"ஆகட்டும்; நான் தக்க ஏற்பாடு செய்கிறேன்" என்றார் வக்கீல்.

• • •

முதிய பிராயத்தவரும் உத்தமருமான அந்த வக்கீல் சீதாவுக்குச் சித்தப் பிரமை இல்லை யென்றும், பல காரணங்களினால் மனம் குழம்பி யிருந்தாலும் தன்னுடைய நிலைமையைப் பற்றி யுக்தா யுக்தம் பார்த்துத் தீர்மானிக்கும் தெளிந்த அறிவு அவளிடம் இருக்கிறது என்றும் விரைவிலேயே அறிந்தார். அன்று பிற்பகலில் தன்னுடைய வீட்டுக்கு அழைத்துப் போய் உணவு அருந்துவித்தார். இரவில் ஆக்ரா ஸ்டேஷனுக்கு அழைத்துப் போனார். வழியில் அவர் "அம்மா! சாட்சி சொன்ன சாயபுவை உனக்கு முன்னமே தெரியுமா?" என்று கேட்டார்.

"தெரியாது. அவர் எங்கே இப்போது? நான் பார்த்து நன்றிகூற வேண்டும்!" என்றான்.

"அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். மகனே! நான் ஒரு விஷயம் சொல்லுகிறேன், கேட்கிறாயா?"

"அவசியம் கேட்கிறேன், ஐயா! அவ்வளவு நன்றியாவது தங்களிடம் எனக்கு இருக்க வேண்டாமா?"

"நல்லது, கேள்! கடவுளின் அருள் உன்னை இன்று காப்பாற்றியது. அந்த முகம்மதியனின் சாட்சியந்தான் உன்னுடைய விடுதலைக்குக் காரணமாயிருந்தது என்பது உண்மைதான். ஆனால் அவனை யோக்கியன் என்று நான் கருதவில்லை. ஏதோ ஒரு நோக்கம் வைத்துக் கொண்டுதான் அவன் தான் திருடியதாகச் சொல்லி உன்னை விடுதலை செய்திருக்கிறான். இதற்கு ஏதோ மர்மமான காரணம் இருக்க வேண்டும். அதைப் போலீஸார் கண்டு பிடிப்பார்கள். ஆனால், உன்னைப் பொறுத்த வரையில் நீ இனிமேல்தான் சர்வ ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். இதைக் காட்டிலும் பெரிய ஆபத்து உனக்கு வரக்கூடும்!"

"இன்றைக்கு என்னைக் காப்பாற்றிய கருணாமூர்த்தியான கடவுள் இனியும் காப்பாற்ற மாட்டாரா?"

"காப்பாற்றுவார்; காப்பாற்றட்டும். ஆனால் நாமும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அந்த சாயபு பெட்டி திருடவில்லை யென்பது நிச்சயம். உனக்கு யாரோ பெட்டியைக் கொடுத்ததாகச் சொன்னாயே, அதை நான் நம்புகிறேன். பின் எதற்காக அந்த முகம்மதியன் திருட்டுக் குற்றத்துக்குத் தன்னை ஆளாக்கிக் கொண்டு உன்னை விடுதலை செய்விக்கிறான்?"

"ஐயா! அந்த முகம்மதியர் இப்போது எங்கே? ஒருவேளை அவரைக் கைது செய்து விட்டார்களோ?"

"ஒரு வேளை என்ன? திருட்டுக் குற்றத்தைக் கோர்ட்டில் ஒப்புக் கொண்ட ஆசாமியைச் சும்மா விட்டு விடுவார்களா? கோர்ட்டுக்கு வெளியே வந்ததும் அவனைக் கைது செய்து சிறைப்படுத்தி யிருக்கிறார்கள்."

"ஐயா! அவரைத் தாங்கள் பார்த்து ஏதாவது உதவி செய்ய வேண்டும். உங்களுக்குப் புண்ணியம் உண்டு."

"என்னால் ஆனதைச் செய்கிறேன். சற்று முன்னால் அவனைப் போய்ப் பார்த்துவிட்டுத்தான் வந்தேன். அவன் தன்னைப் பற்றி ஒன்றும் பேசவில்லை. உன்னைப் பற்றியே பேசினான். உன்னை எப்படியாவது பத்திரமாய் டில்லிக்கு அனுப்பி விட வேண்டுமாம். அங்கே உள்ளவர்கள் உன்னைக் கவனித்துக் கொள்வார்களாம். ரயில் செலவுக்குப் பணம் கூடக் கொடுப்பதாகச் சொன்னான். நான்தான், 'வேண்டாம்; நான் டிக்கட் வாங்கி அனுப்பி விடுகிறேன்' என்று உறுதியாகச் சொல்லி விட்டு வந்தேன். மகனே! என்னுடைய புத்திமதியைக் கேட்பாயா?"

"சொல்லுங்கள், ஐயா!"

"என் அபிப்பிராயத்தில், நீ இப்போது டில்லிக்கே போகக் கூடாது. அங்கே யாரோ உன்னை ஏதோ செய்யக் காத்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். வேறு எங்கேயாவது போவது நல்லது. நீ மதராஸ்காரிதானே? மதராஸுக்கே போகலாமே?"

"இல்லை, ஐயா! மதராஸுக்கு இப்போது போக நான் இஷ்டப்படவில்லை. அதற்குக் காரணம் உண்டு."

"டில்லிக்குத்தான் போகவேண்டும் என்று நீ பிடிவாதம் பிடித்தால்......"

"இல்லை; அதற்கும் எனக்குப் பயமாயிருக்கிறது. அந்த முகம்மதியரை நான் முன்பின் பார்த்ததில்லை. பின் எதற்காக அவர் அவ்விதம் சாட்சியம் சொன்னார் என்று புரியவில்லை. மொத்தத்தில் டில்லிக்குப் போக எனக்குப் பயமாய்த்தானிருக்கிறது. கல்கத்தாவில் எனக்கு ரொம்ப வேண்டிய சிநேகிதர்கள் இருக்கிறார்கள். ஆகையால் கல்கத்தா போகலாம் என்று பார்க்கிறேன். டிக்கட்டுக்குத்தான பணம் வேண்டும்."

"அதைப் பற்றி நீ கவலைப்படாதே. நான் டிக்கட் வாங்கிக் கொடுக்கிறேன். யாராவது தெரிந்தவர்கள் கல்கத்தா போனாலும் போவார்கள். அவர்களிடம் உன்னை ஒப்புவித்து அனுப்பி வைக்கிறேன். சரிதானா?"

"அப்படியே ஆகட்டும். எனக்கு நல்ல காலம் பிறக்கும்போது நீங்கள் கொடுக்கும் பணத்தைத் திருப்பி அனுப்பிவிடுகிறேன்."

"பணத்தைப் பற்றி யார் கேட்டார்கள்? நீ செளக்கியமாகப் போய்ச் சேர்ந்தால் அதுவே எனக்குப் பரம திருப்தி!" என்றார் வக்கீல்.



# விற்பனையாளர் கால்வலியினால் முடமானார்



## பின்பு 'க்ருஷன்' அதன்வினைவை வெற்றிகரமாகத் தாக்கியது

விற்பனையாளர் காந்தி மேல் நாட்டு பிரயாணத்திலின்று திரும்பியபோது அவரை ரயிலிலின்று தூக்கி வர வேண்டியதாயிற்று. மறுபடியும் வேதனை உண்டாக்கும் கால் வலி அவரை அதிவிரைவில் பிடித்தது. சில நாட்கள் கழிந்து எவ்வாறோ காரியாலயத்தை அடைந்து மானேஜரைக் கண்டு அவர் ராஜினாமாக் கொடுத்தார்......

ஆறு மாதங்களுக்குப் பின்: என்ன மாறுதல். அதிக விற்பனையின் காரணமாக காந்தி கால் வருடப் பரிசைப் பெற்றுவிட்டார். அவரது சகாக்கள் தங்கள் சந்தோஷத்தைத் தெரிவிக்க அவரைச் சூழ்ந்து கொண்டனர். "உங்கள் ரகசியம் என்ன" என்று அவர்கள் கேட்டனர்.

"தினம் காலை உண்டிக்கு முன் "க்ருஷன்" சாப்பிடுவதுதான்" அவர் கொடுத்த பதில்.

கால்வலி உபத்திரவம், நரம்புத் தளர்ச்சி இவைகள் சுத்தமற்ற ரத்த ஓட்டத்தின் அறிகுறி. அவைகள் ரத்தத்தில் விஷம் கலந்திருப்பதைக் காண்பிக்கின்றன. 'க்ருஷன்' ஆறுவித இயற்கை உப்புகளின் சேர்க்கையாதலினால் உட் சுத்தத்தை உறுதியாக்கி ரத்த ஓட்டத்தை துப்புரவாக்குகிறது. புதிய பலத்துடன் சுத்தம் செய்யப்பட்ட நீங்கள் புது வீரத்துடன் பரிணமிக்கிறீர்கள். பின்பு கால்வலி நரம்புத் தளர்ச்சி சம்பந்தப்பட்ட நோய்கள் உங்களை விட்டுச் செல்கின்றன.

இன்றே 'க்ருஷன்' வாங்குங்கள் கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் எங்கும் கிடைக்கும் விலை ரூ. 1-10 (மஞ்சள் பெட்டியில்)




## நீங்கள் கூட அந்த 'க்ருஷன்' உணர்ச்சியை அடையலாம்

# பத்து வருஷங்களுக்குப் பின்....

கி. ரங்கராஜன்

எனக்கு விவாகமான காலத்து நாட்களுக்கெல்லாம் என் கணவர் தம்முடன் என்னையும் அழைத்துக்கொண்டு போய் விட்டார். அதுமுதல் என் பிறந்தகத்தை நான் எட்டிப் பார்க்கவில்லை. எனவே, பத்து வருஷங்களுக்குப் பிறகு மறுபடியும் திருவிடைமருதூருக்குப் போகும் சந்தர்ப்பம் கிடைத்தபோது, நான் மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன்.

இந்தப் பத்து வருஷ காலத்தில் என் பிறந்த வீட்டில் எத்தனையோ விசேஷங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஒன்றுக்குமே நான் போகவில்லை. என் தங்கைக்குக் கல்யாணம் நடந்தது. எனக்குத் தம்பி பிறந்தது ஒன்றுமே எனக்குத் தெரியாது. எனது தாயார் எத்தனையோ தரம் செத்துப் பிழைத்தாள்; போய்ப் பார்க்கவில்லை. அவர்களுடைய முகம்கூட எனக்கு மறந்து போய்விட்டது. அவர்களுடைய முகம் மட்டும் என்ன? என்னுடைய பெயரைக் கூடச் சில சமயம் நான் மறந்துவிடுவேன். ஏனெனில், 'மிஸஸ் ராஜகோபாலன்' என்றுதான் என்னைக் கூப்பிடுகிறார்கள். ஜில்லா ஜட்ஜின் மனைவியானதில், ருக்மிணி என்ற பெயர் மாறிப்போய் மிஸஸ் ராஜகோபாலனாகிவிட்டேன். "ருக்மிணி! அடி ருக்மிணி!" என்று அருமையாகக் கூப்பிடும் அந்த அன்பு ததும்பும் வார்த்தை இனி என்று கேட்கப்போகிறோம் என்று ஆகிவிட்டது!

என் தகப்பனார் ஏழையாக இருந்தால் என்ன? அவர் எனக்கு என்றும் தகப்பனார் தானே? இந்தத் தடவை அவர் பிழைப்பது துர்லபம் என்று அம்மா கடிதம் எழுதியிருந்தாள். போய்ப் பார்க்க வேண்டும் என்று மனது அடித்துக்கொண்டது. ஆனால் என் கணவர் என்னை அனுப்பச் சம்மதித்தால்தானே? "நீ அங்கெல்லாம் போய் அவதிப்பட வேண்டுமா? நூறோ இருநூறோ அனுப்பிவிடுவோமே; நல்ல வைத்தியமாகச் செய்து கொள்ளட்டும்!" என்றார்.

எனக்குக் கோபமும் ஆத்திரமுமாக வந்தது. "பணமா பிரதானம்? பணத்துக்காகவா அவர்கள் ஏங்கி நிற்கிறார்கள்?" என்று கேட்க நினைத்தேன். ஆனால் சட்டென்று நிறுத்திக்கொண்டேன். அப்படியெல்லாம் கேட்க எனக்கு வாயேது? உண்மையில் என் தாய் தந்தையர்களுக்குப் பணம் பிரதானம்தான்; பணத்தை உத்தேசித்துத்தானே அவர்கள் என்னை நாற்பத்தைந்து வயதான ஒருவருக்கு வாழ்க்கைப்படுத்தினார்கள்?

• • •

என்னுடைய தகப்பனார் அப்படி ஒன்றும் பணத்துக்காக ஏங்குபவரல்ல. ஏதோ கொஞ்சம் நிலபுலன்கள் இருந்தன. முதல் பெண்ணுக்கு எப்படியோ கலியாணம் பண்ணிவிட்டார். நான் இரண்டாவது பெண். எனக்கு வரன் தேடும் விஷயத்தில் ரொம்ப சிரமப்பட்டுவிட்டார். எங்கள் தெருவுக்கு எதிர்த்தாற்போலிருந்த சாரியில் ஒரு போஸ்ட் மாஸ்டர் குடியிருந்தார். அவருடைய மூத்த பையன் சென்னையில் காலேஜில் படித்துக்கொண்டிருந்தான். வருஷத்தில் இரண்டு முறை லீவின்போது ஊருக்கு வருவான். இரண்டு மூன்று வாரங்கள் சேர்ந்தாற்போல இருப்பான். உண்மையைச் சொல்லுவதில் என்ன பிசகு? களை பொருந்திய அவனது முகத் தோற்றம் என் மனதை அவன்பால் இழுத்தது. அவனுக்கும் என்னை விவாகம் செய்துகொள்ள சம்மதந்தான் என்று எனக்குத் தெரியும். ஏதோ ஒன்றைச் சாக்கிட்டு எங்கள் வீட்டுக்கு அவன் அடிக்கடி வருவான். நானும் அவர்கள் வீட்டுக்குப் போவதுண்டு. என் தகப்பனார் என்னை அந்தப் பிள்ளையாண்டானுக்குக் கொடுத்துவிடலாமா என்று நினைத்தார். கொடுத்திருந்தால் அப்பொழுது நான் மிகவும் சந்தோஷமுள்ளவளாகவே இருந்திருப்பேன்.

இப்பொழுதுதான் என்ன? நான் சந்தோஷமாக இல்லையா? அரண்மனை போன்ற வீடு; விதவிதமான புடவைகள்; உடல் நிறைய நகைகள்; மோட்டார் சவாரி எல்லாம் இருக்கின்றன. சந்தோஷத்துக்கு ஒன்றும் குறைவு கிடையாது. அந்த மூத்துண்டாய் சாஸ்திரிகளைக் குளிக்க வேளையில் நினைக்கவேண்டும். அவருடைய

பெரு முயற்சியால்தான் என்னைச் சித்தூர் சப் ஜட்ஜுக்கு என் தகப்பனார் இளையாளாக விவாகம் செய்து கொடுத்தார்.

அடுத்த வருஷம் என் கணவருக்கு ஜில்லா ஜட்ஜு பதவி கிடைத்தது. நான் வந்த வேளை, தனக்குப் பதவி உயர்ந்தது என்று என் கணவர் சொன்னார். விவாகம் ஆன நாள் முதல் இன்றுவரை அவர் என்னிடம் பிரியமாகவே இருக்கிறார். என்னுடைய பரிபூரணமான காதலை அவருக்கு அளிக்க முடியாவிட்டாலும், அவரிடம் எனக்கு அன்பும், மதிப்பும் உண்டு. நான் அவரிடம் கொண்டிருக்கும் அளவு பதிபக்தி மற்ற பெண்களுக்குத் தங்கள் நாயகர்களிடத்தில் இருந்தால் போதும் என்று நிச்சயமாக நான் சொல்லுவேன்.

கணவர் வீட்டுக்கு வந்த சில நாட்கள் வரையில், எப்பொழுதாவது அந்தப் பையன் —அனந்தராமனின் முகம்—என் மனக் கண்முன் தோன்றும். வருஷங்கள் செல்லச் செல்ல அந்த முகமும் மறந்துவிட்டது.

கல்யாணம் ஆனபிறகுகூட எங்கள் பிறந்தகத்தார்களுக்கு என் கணவர் எவ்வளவோ உபகாரம் செய்திருக்கிறார். ஆனால் ஒரு தடவையாவது என்னை என் தகப்பனார் வீட்டுக்கு அனுப்ப அவர் சம்மதிக்கவில்லை. அதற்காக எனக்கு அவர்மீது கோபமும் கிடையாது. இந்தக் காலத்தில் உறவை விடப் பணம்தான் பிரதானம். அந்தப் பணத்தை நான் விரும்பும்போதெல்லாம் அவர் என் தகப்பனாருக்கு அனுப்பிக் கொண்டுதானிருக்கிறார்.

போனமாதம் என் கணவர் உத்தியோகத்திலிருந்து விலகி ஓய்வு பெற்றுக்கொண்டார். சில சௌகரியங்களை உத்தேசித்துச் சென்னையிலேயே இப்பொழுது நாங்கள் இருந்து கொண்டிருக்கிறோம்.

## 2

அன்று வந்த என் அன்னையின் கடிதம் என்னைப் பெரு வேதனைக்கு ஆளாக்கியது. எப்படியும் இந்த ஒரு முறையாவது என் தகப்பனாரைப் பார்க்க வேண்டும் என்று என் மனம் துடித்தது. பலவிதமான ஆக்ஷேப சமாதானங்களுக்குப் பிறகு, என் கணவர் என்னை என் பிறந்த வீட்டுக்கு அனுப்பச் சம்மதித்தார். ரயில்வே ஸ்டேஷன்வரை என்னுடன் வந்தார். முதல் வகுப்பு டிக்கெட் வாங்கிக் கொடுத்து, கையில் நூறு ரூபாயும் கொடுத்தனுப்பினார். நாலு கூடைகளைப் பழத்தினால் நிரப்பி அவற்றையும் என்னுடன் அனுப்பி வைத்தார்.

முதல் வகுப்பில் பிரயாணம் என்றுபேர் தான்; ஆனால் கண்களைச் சற்றுக்கூட மூட முடியவில்லை. என்னென்னமோ நினைவுகள் மனத்தில் தோன்றி என்னைத் தூங்கவிடவில்லை. நம் தகப்பனாரை உயிருடன் காண்போமோ என்ற கவலை ஒரு புறம்; மூக்கும் விழியுமாக, அப்போது தான் முளைத்திருக்கும் முத்துப் பற்களுடன் விளையாடிக் கொண்டிருக்கும் என் தம்பியைக் காணும் ஆசை ஒரு புறம்—இப்படியாக அந்த நீண்ட இரவை ஒருவிதமாகக் கழித்தேன்.

கிழக்கு வெளுக்கும் சமயம். வண்டி திருவிடைமருதூர் வந்தது. அந்தச் சித்தூரிலே மகாதானத் தெருவிலேதான்



எங்கள் வீடு இருந்தது. வண்டியை விட்டு இறங்கி எங்கள் வீட்டுக்குப் போகும் வரை என்னுடைய நினைவு என் வசமில்லை. தெருக் கோடியிலிருந்து எங்கள் வீட்டு வாசலைக் கவனித்தேன். வாசலில் கோலம் போட்டிருந்தது. இரண்டே தாண்டலில் வீட்டுக்குள் நுழைந்தேன். காமரா உள்ளில் அப்பா தூங்கிக்கொண்டிருந்தார். "அப்பா!" என்று அலறிக் கொண்டு அவர்மீது விழுந்தேன்.

"ருக்கு! வாடி! என் ருக்கு, வாடி!" என்று சொல்லிக்கொண்டு என் அப்பா, என் அருமை அம்மா இருவரும் என்னைக் கட்டிக்கொண்டார்கள். "பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ!" என்று கம்பர் கூறியது, ராமனுக்கும் சீதைக்கும் தான் என்பதில்லை; எனக்கும் என் தகப்பனுக்கும்கூடப் பொருந்தும். அரை மணி நேரம் என்னால் ஒரு வார்த்தையும் பேச முடியவில்லை.

என் தம்பிக்கு ராஜு என்று பேர் வைத்திருந்தார்கள். ராஜா மாதிரி இருந்தான் அவன். அம்மாதான் இளைத்துத் துரும்பாக இருந்தாள். உழைத்து உழைத்து அவள் உடம்பு ஓடாகப் போயிருந்தது. பத்து வருஷங்களாகப் பிரிந்திருந்த அந்தப் பிரிவுத் துயரை நாலு நாட்கள் இரவு பகல் இல்லாமல் பேசி ஆற்றிக் கொண்டோம். அப்பா பிழைத்துக் கொண்டார். என்னைப் பார்த்து அவர் அடைந்த மகிழ்ச்சியே அவரைப் பிழைக்கச் செய்திருக்க வேண்டும்.

நான் அந்த ஊருக்கு வந்து ஒரு வாரம் கூட ஆகியிருக்காது. அதற்குள் மூன்று தந்தி அடித்துவிட்டார் என் கணவர். நான் புறப்பட இருந்த அன்றைக்கு அம்மா எனக்கு ஒரு விருந்து வைத்தாள். அந்த விருந்துக்குத் தெருவிலே இருந்தவர்களெல்லோரையும் சாப்பிட அழைத்திருந்தாள். வந்தவர்களில் பாதிப் பேரை எனக்குத் தெரியவில்லை. அவர்களில் ஒருத்தி ஏழு வயதுப் பையன் ஒருவனை அழைத்து வந்திருந்தாள். அந்தப் பையனைப் பார்த்ததும் நான் திடுக்கிட்டுப் போய்விட்டேன். முகம், ஏற்கெனவே பார்த்த ஒருவருடைய முகமாக இருந்தது. எங்கே, எப்பொழுது பார்த்தோம் என்று தெரியவில்லை. அந்தப் பையன் யார் என்று அம்மாவைக் கேட்டேன். அவள் சொன்ன பதில் என்னைத் தூக்கி வாரிப் போட்டது. "அனந்த ராமனைத்தான் உனக்குத் தெரியுமே, அந்தப் போஸ்ட் மாஸ்டர் பிள்ளை — அவன் பையன்தான் இவன். வெண்ணெய் திரண்டு வரும் சமயம் தாழி உடைந்தது என்பதைப்போல, அந்தப் பிள்ளையாண்டான் நல்ல ஸ்திதிக்கு வரும் சமயத்தில், திடீரென்று விஷஜுரத்தினால் இறந்து விட்டான்!" என்று அம்மா சொன்னாள்.

பத்து வருஷங்களுக்கு முன் பார்த்த அந்த அனந்தராமனின் முகத்தை, அந்தக் குழந்தையினுடைய இளம் முகத்தில் நான் கண்டேன். அதே கம்பீரம், அதே அழகு—தகப்பனாரை உரித்து வைத்தமாதிரி இருந்தான். அந்தப் பையனைப் பார்த்ததும் ஏதோ ஒரு நினைவு—சொல்லக்கூடாத ஒரு அசட்டு நினைவு — என் உள்ளத்தில் எழுந்தது. அனந்தராமனைக் கல்யாணம் செய்து கொண்டிருந்தால் இந்த மாதிரி நமக்கும் ஒரு பிள்ளை — மேலே சென்ற நினைவை சட்டென்று நிறுத்தி அடக்கிக் கொண்டேன்.















அனந்தராமன் தன்னுடைய இளம் மனைவியையும், குழந்தையையும் மிகவும் வறிய நிலையில் — உலகத்தார் ஆதரவில் — விட்டுப் போனதைச் சொல்லி அம்மா ரொம்ப வருத்தப்பட்டாள்.

அன்று முழுதும் அந்தக் குழந்தை நினைவாகவே இருந்தது எனக்கு.

3

திருவிடைமருதூருக்கு 'பாஸ்ட் பாஸஞ்சர்' இரவு எட்டரை மணிக்கு வந்தது. அந்த வண்டியில் அம்மா என்னை ஏற்றி அனுப்பினாள். எவ்வளவு ஆறுதல் சொல்ல வேண்டுமோ, அவ்வளவும் சொல்லி நான் அவளைத் தேற்றினேன். அடிக்கடி வந்து பார்த்து விட்டுப் போவதாகவும் சொன்னேன்.

எழும்பூர் ஸ்டேஷனுக்கு என் கணவர் வந்திருந்தார். "இன்று நீ வராவிட்டால் நானே அங்கு வருவதாக இருந்தேன்!" என்று சொல்லி அவர் என்னைக் கீழே இறக்கினார். நாங்கள் மோட்டாரில் ஏறிக் கொண்டோம். "அப்பாவுக்கு உடம்பு எப்படி இருக்கிறது?" — இதுதான் அவர் கேட்ட முதல் கேள்வியும் கடைசிக் கேள்வியும்!

நான் ஏதோ சொன்னேன். அவ்வளவுதான்; பிறகு ஒரு வார்த்தைகூட எங்கள் பிறந்தகத்தைப் பற்றி அவர் கேட்கவில்லை.

ஒரு வாரம் சென்றது. ஒரு நாள் என் கணவர் என்னை மாடிக்கு அழைத்தார். "ருக்மிணி! உன்னிடம் சில விஷயங்கள் பேசவேண்டும்......" என்று ஆரம்பித்தார். அவருடைய முகம் அப்போது பார்ப்பதற்குப் பரிதாபமாக இருந்தது.

"ருக்மிணி, கவனமாகக் கேள்! உன்னை நான் விவாகம் செய்து கொண்டபோது எனக்கு நாற்பதைந்து வயது. இப்பொழுது ஐம்பதைந்து. இன்னும் ஐந்து வருஷம் போனால் எனக்குச் சஷ்டி அப்த பூர்த்தி நடக்கும். சாதாரணமாக அந்த வயதில் யாருமே தாத்தாவாக ஆகிவிடுவார்கள். அதாவது பேரன், பேத்தி பிறந்து விடுவார்கள். ஆனால் எனக்கோ குழந்தை ஒன்றும் கிடையாது. 'அப்பா' என்று செல்லிக் கூப்பிட நான் பாக்கியம் செய்யவில்லை. அந்தத் துர்ப்பாக்கியத்துக்கு உன்னையும் நான் ஆளாக்கினதுதான் எனக்கு மிகவும் வருத்தத்தைக் கொடுக்கிறது. என்னுடைய சௌக்கியத்தையும், இன்பத்தை

யும் நினைத்தேனே அன்றி, உன்னுடைய சௌக்கியத்தையும், பிற்கால வாழ்க்கையையும் நான் எண்ணிப் பார்க்கவில்லை. உன் இளமை கழிவதையும் என் வயது ஏறுவதையும் நினைக்கும்போது, உன் விஷயத்தில் நான் பெரிதும் அபராதம் செய்தவனாகி விட்டேன்......!"

"அபராதம் செய்ததாகத் தாங்கள் சொல்லலாமா? அணைந்துபோன எங்கள் வீட்டு விளக்கை ஏற்றி வைத்த பிரபு அல்லவா, தாங்கள்!" என்று நான் இடைமறித்துச் சொன்னேன்.

"ருக்கு, அப்படி அல்ல; நீ சொல்லுவது தவறு. நான் இறந்துபோனால் என்னுடைய சொத்து முழுதும் என் பங்காளி ஒருவனைச் சேரும். அப்பொழுது உன் கதி என்ன? ஆகவே, என் சொத்து முழுவதையும் உனக்கு இப்பொழுதே எழுதி வைத்துவிட நான் விரும்புகிறேன். நீ, என்னை—இந்தக் கிழவனை—விவாகம் செய்து கொண்டதற்கு இந்த உபகாரமாவது நான் செய்ய வேண்டாமா?"

திடீரென்று என் நெஞ்சில் ஓர் எண்ணம் மின்னலைப்போல மின்னிற்று. "என்னுடைய மனத்தில் ஒன்று தோன்றுகிறது; தாங்கள் அப்படிச் செய்வீர்களா?" என்று கேட்டேன்.

"என்ன அது? சொல், அப்படியே செய்கிறேன்!" என்றார்.

"எங்கள் ஊரில் அனந்தராமன் என்று ஒருவர் இருந்தார். அவருடைய குடும்பத்துக்கு நாங்கள் ரொம்ப வேண்டியவர்கள். அவர் இறக்கும்போது தம்முடைய மனைவியையும் ஒரு குழந்தையையும் அனாதையாக விட்டுவிட்டுப் போய்விட்டார். அந்தக் குழந்தைக்கு இப்பொழுது ஏழு வயதாகிறது. அவனைத் தாங்கள் ஸ்வீகாரம் செய்து கொள்ளுங்கள். அந்தக் குடும்பத்தாரின் விளக்கையும் தாங்கள் ஏற்றி வைத்ததாக இருக்கும்!" என்றேன்.

என் கணவர் எவ்வளவு நல்லவர்! அவரைப் பதியாகப் பெற்ற நான் எவ்வளவு பாக்கியம் செய்திருக்க வேண்டும்!

"இதுதானே, என்ன பிரமாதம்! அப்படியே செய்வோம்" என்றார்.

கோபு என் வயிற்றில் பிறக்கவேண்டியவன் என்று நினைத்தேன். பிறக்காவிட்டால் என்ன? "அம்மா!" என்று அவன் இன்று என்னைக் கூப்பிடுகிறான். அந்தத் திருப்தி ஒன்றே எனக்குப் போதும்.




### சரிதான்!

புருஷன்:—என்னடி, பொழுது விடியும் சமயமாயிருக்கும்போல் இருக்கிறதே!

மனைவி:—உங்களுக்கு எப்படித் தெரிந்தது அது?

புருஷன்:—குழந்தை அழுகையை நிறுத்தித் தூங்க ஆரம்பித்து விட்டதிலிருந்து சொன்னேன்!

★

### விருந்தாளி!

முதல் பிச்சைக்காரன் (திண்ணையில் உட்கார்ந்திருப்பவரைப் பார்த்துக் கோபத்துடன்):—'பிச்சை இல்லே'ன்னு பேசாம போறேன்; எதுக்கு 'கழுதை, குதிரை'ன்னு திட்டுறீங்க? உங்களுக்குத்தான் பேசத் தெரியும்னு நினைச்சுட்டீங்களா?

இரண்டாவது பிச்சைக்காரன் (முதல் பிச்சைக்காரனின் தோளைப் பிடித்து):—அவன் கிடக்கிறான், நீ சும்மா வா, அண்ணே! அந்த வீட்டுக்கு அவன் விருந்தாளியா வந்து குந்திக்கிட்டிருக்கான்போலே யிருக்குது!

★

### பதிலுக்குப் பதில்!

அப்பா:—ஏண்டா, ராமு! தாத்தாவின் பாராயண புஸ்தகத்தை நீ ஏன் எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறாய்?

ராமு:—அவர் ஏன் என்னுடைய பாலபாடத்தை எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறார்?

★

### சிரமம் வேண்டாம்!

கடைக்காரர்:—மிஸ்டர், இந்தத் தமிழ் 'நோட்'டை வாங்காத மாணவர்களே கிடையாது. இந்த 'நோட்ஸ்' நீங்கள் பரீக்ஷைக்குப் படிக்கவேண்டிய சிரமத்தில் பாதியைக் குறைத்துவிடும்.

மாணவன்:—அப்படியானால் அந்தப் புஸ்தகத்தில் இரண்டு பிரதி கொடுங்கள்!




தாத்தாவுக்குத் தம் பேரன் மணியின்மீது மிகவும் பிரியம். மணியும் பள்ளிக்கூடம் போகும் நேரம் தவிர, பாக்கி நேரம் முழுவதும் தாத்தாவிடமே விளையாடிக்கொண்டிருப்பான். தாத்தாவினுடைய தடியை எடுத்து ஒளித்து வைப்பான்; அவர் தடியைத் தேடி அலைந்த பிறகு அதை எடுத்துக் கொடுப்பான். அதுமட்டுமா? தாத்தாவிடம் சீடையைக் கொடுத்து, "தின்னு, தாத்தா!" என்று பரிகாசம் செய்வான். தாத்தா ராமாயணம் படிக்கும்பொழுது புஸ்தகத்தில் வைத்திருக்கும் அடையாளத்தை வேறு பக்கத்திற்கு மாற்றி வைப்பான். இவ்வளவு விஷமம் செய்தாலும் தாத்தாவுக்கு மணி இல்லாவிட்டால் பொழுது போகாது; மணிக்கும் தாத்தா இல்லாவிட்டால் பொழுது போவதில்லை.

ஒரு நாள் மாலை ஐந்து மணி இருக்கும். தாத்தா காலில் செருப்பை மாட்டிக் கொண்டு, அவசரத்தில் சட்டையைத் திருப்பிப் போட்டுக் கொண்டு, தலையில் அங்கவஸ்திரத்தைச் சுற்றிக்கொண்டு, கையில் தடியுடன் வெகு வேகமாகப் போய்க் கொண்டிருந்தார். அப்பொழுதுதான் மணி பக்கத்துத் தெரு வழியாக வந்து கொண்டிருந்தான். வேகமாகப் போய்க்கொண்டிருந்த தாத்தா மணியைப் பார்க்கவில்லை. ஆனால் பொல்லாத மணி மாத்திரம் தாத்தாவைப் பார்த்து விட்டான்.

"என்ன இது! ஒருநாளுமில்லாமல் தாத்தா தனியாகக் கிளம்பி விட்டாரே! என்னை அழைத்துக் கொள்ளாமல் ஒருநாளும் வெளியே போக மாட்டார், அந்த வழக்கத்துக்கு மாறாக இன்று எங்கேயோ போகிறாரே! இதில் ஏதோ விஷயம் இருக்கிறது. தாத்தாவுக்குத் தெரியாமல் அவர் பின்னாலேயே சென்று பார்ப்போம்!" என்று மணி தாத்தாவுக்குப் பின்னாலேயே போனான்.

தாத்தா வேகமாகச் சென்று கொண்டிருந்தார். நடுவில் இங்கும் அங்குமாகப் பார்த்துக்கொண்டு சென்றார். ஓரிடத்தில் சற்று நின்று சுவரில் ஒட்டியிருந்த சினிமா விளம்பரம் ஒன்றைப் படித்தார்.

அப்பொழுதுதான் தாத்தா தன்னை ஏமாற்றிவிட்டுச் சினிமாவுக்குப் போகிறார் என்ற விஷயம் மணிக்குத் தெரிய வந்தது. "இருக்கட்டும், இருக்கட்டும்; தாத்தாவை என்ன பண்ணுகிறேன், பார்!" என்று அவன் அவரைத் தொடர்ந்து போய்க்கொண்டிருந்தான்.

மணி நினைத்தது உண்மைதான். வேகமாக நடந்த தாத்தா ஒரு சினிமாக் கொட்டகைக்குள் நுழைந்தார். ஆனால் அங்கே ஒரு பெருங் கூட்டம் டிக்கெட் வாங்குவதற்கு 'க்யூ' வரிசையில் நின்றுகொண்டிருந்தது. தாத்தா அவர்களை நெருங்கி ஏதோ கேட்டுக் கொண்டிருந்தார்.

அதைப் பார்த்த மணி தன் மனதிற்குள், "தாத்தா, தாத்தா! உனக்கு வேண்டும். யாராவது தெரிந்தவர்

கண்டு கொண்டு சுலபமாக டிக்கெட் வாங்கலாம் என்று பார்க்கிறாய். இந்தக் காலத்தில் உனக்கு டிக்கெட் அகப்படப் போவதில்லை. என்னை ஏமாற்றப் பார்த்தால் உனக்கு எப்படி டிக்கெட் கிடைக்கும்?" என்று சொல்லிக் கொண்டான்.

தாத்தாவுக்கோ டிக்கெட் கிடைக்கும் வழியாயில்லை. கொஞ்ச நேரம் அங்கும் இங்கும் அலைந்தார். பலன் இல்லை. மணியும் தாத்தாவைப் பின் தொடர்ந்து செல்வதை நிறுத்தவில்லை.

மறுபடியும் தாத்தா எங்கே வேகமாகச் சென்றார், தெரியுமா? அரை மைலுக்கு அப்பாலிருந்த மற்றொரு சினிமாக் கொட்டகைக்குத்தான்! மணி ஆச்சரியம் தாங்காமல் விழித்தது விழித்தபடி அவரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

என்ன ஏமாற்றம்! "இடம் இல்லை; டிக்கெட்டுகள் யாவும் விற்பனை ஆகிவிட்டன" என்று ஓர் அட்டையில் எழுதி அங்கே தொங்கவிட்டிருந்தது. பாவம், தாத்தா டிக்கெட் கிடைக்காமல் திரும்பி வரும் ஜனங்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். கூட்டம் கலைந்தவுடன் சற்றுக் களைப்பாறலாம் என்று எண்ணி, அங்கிருந்த ஒரு பெஞ்சியில் உட்கார்ந்தார். சிறிது நேரம் சென்றதும் மறுபடியும் கையில் தடியை எடுத்துக் கொண்டு தாத்தா வெகு வேகமாகக் கிளம்பினார்.

தன்னை ஏமாற்றிவிட்டுச் சினிமாவுக்குச் செல்ல விரும்பிய தாத்தா டிக்கெட் கிடைக்காமல் வீடு திரும்பியதைப் பார்க்க மணிக்குச் சந்தோஷமாயிருந்தது. "இருக்கட்டும்; வீடு வந்ததும் தாத்தா சினிமா பார்க்கப் போனதைச் சொல்லி அவரை அவமானப்படுத்துகிறேன், பார்!" என்று சொல்லிக்கொண்டே தாத்தாவுக்குத் தெரியாமல் அவரைப் பின்பற்றினான்.

தாத்தா வெகு வேகமாக வீட்டுக்கு வந்தார். "மணி, மணி!" என்று கூப்பிட்டுக்கொண்டே வீட்டிற்குள் நுழைந்தார். உடனே மணி, "ஏன் தாத்தா, இப்பொழுது மட்டும் என்னைக் கூப்பிடுகிறாய்? நீ சினிமாவுக்குப் போய் டிக்கெட் கிடைக்காமல் வந்த விஷயம் எனக்குத் தெரியாதென்று நினைத்தாயா?" என்றான்.

இதைக் கேட்டதும் தாத்தாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. "என்னடா உளறுகிறாய்? சினிமாவுக்கு யார் டிக்கெட் வாங்கப் போனார்கள்? சாயங்கால வேளையில் வீட்டில் உன்னைக் காணவில்லையே, ஒரு வேளை என்னை ஏமாற்றிவிட்டு எனக்குத் தெரியாமல் சினிமாவுக்குப் போயிருக்கிறாயோ என்று எண்ணியல்லவா நான் சினிமாக் கொட்டகைகளுக்குப் போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன்? உன்னால் வீண் அலைச்சல்! நீ சினிமாக் கொட்டகையில் என்னைப் பார்த்தபொழுது 'இதோ இருக்கிறேன்' என்று சொல்லக் கூடாதா, போக்கிரிப் பயலே!" என்று விளையாட்டாகத் தன் தடியை ஓங்கினார்.

"என்னைத் தேடி நீ அலைகிறாய் என்பது எனக்கு எப்படித் தெரியும் தாத்தா?" என்றான் மணி.

இந்தச் சம்பவத்தைக் கேட்ட மணியின் தாயாரும் தகப்பனாரும் இடி இடி என்று சிரித்தார்கள்.




ஹெட்மாஸ்டர் :— அயோக்கியப் பயலே! நேற்று பரீட்சை எழுதும்போது பக்கத்திலிருக்கும் பையன் எழுதுவதை அடிக்கடி பார்த்தாயல்லவா?

பையன் :— அவன் கையெழுத்து ஒரு தடவை பார்த்தால் புரியவில்லை, ஸார்!

# அன்பில் விளைந்த அமுதம்

அம்மு

ஸ்ரீவாசசாலையில் படித்துக் கொண்டிருந்த நாட்களில் நாங்கள் இணை பிரியாத சிநேகிதர்கள். ராமமூர்த்தி வெகுளி. மனதில் ஒன்றையும் வைத்துக் கொள்ளாமல் எல்லாவற்றையும் என்னிடம் கொட்டிவிடுவான்.

பி. ஏ. பரீக்ஷை முடிந்ததும் ஊருக்குக் கிளம்பும் முதல் நாள் இருவரும் கடற்கரையில் போய் அமர்ந்தோம். முதலில் பரீட்சைப் பேப்பரைப் பற்றிப் பேச்சு ஆரம்பமாயிற்று.

"ஏண்டா! இந்த புரொபஸர்களெல்லாம் ஒரு காலத்தில் மாணுக்கர்களா யிருந்தவர்கள்தானே? நம் கஷ்டம் தெரியாமல் ஏன் இப்படிக் கேள்வி கேட்கிறார்கள்?" என்று கேட்டுவிட்டு, ராமமூர்த்தி முகத்தை வெறுப்பும், சிரிப்புமாக மாற்றிக் கொண்டான்.

"புத்தகத்தைக் கரைத்துக் குடித்தவர்கள்தானேடா, பேராசிரியர்களாக வருகிறார்கள்? தங்களைப் போலவே எல்லோரையும் நினைத்துக் கொண்டு விடுகிறார்கள்! அவர்களைப்போல் நீயும் கரைத்துக் குடித்து வைப்பதுதானே?" என்றேன் நான்.

"ஆமாம், விட்டுத் தள்ளுடா, படிப்பை! இத்தனை நாளாய்த்தான் 'படிப்பு, படிப்பு' என்று பிராணனை விட்டுக் கொண்டிருந்தோமே, இன்னும் என்ன?"

"சரி, இனிமேல் நீ என்ன செய்யப் போகிறாய்?"

"வேறு என்னத்தைச் செய்வது? உத்தியோக வேட்டையைத் தொடங்க வேண்டியதுதான்!"

"அது கிடக்கப்பா, உத்தியோகம்! கலியாணத்தைப் பற்றிச் சொல்லு, முதலில்...!"

"உத்தியோகத்துக்கு முந்தியா கலியாணம்?"



"நீ முந்தி வேண்டுமானாலும் பண்ணிக் கொள், பிந்தி வேண்டுமானாலும் பண்ணிக் கொள்; நான் கேட்கும் கேள்விக்கு அர்த்தம் என்னவென்றால், உன் வருங்கால மனைவி எப்படி இருக்க வேண்டும், அவளைப் பற்றி உன் தீர்மானம் என்ன என்பதுதான்!"

"நான் புதிசாய் என்னத்தைச் சொல்லப் போகிறேண்டா? எனக்கும் எல்லாரையும்போல் அழகாய் மனைவி வரவேண்டுமென்றுதான் ஆசை!"

ராமமூர்த்தி இவ்வாறு கூறியதும் நான் குபீரென்று சிரித்து விட்டேன். "என்னடா, சிரிக்கிறாய்? நீயே பார்த்துக் கொண்டிரு; நான் எப்படிப் பிடிக்கிறேனென்று...?" என்றான் அவன்.

"அடேய்! என் ஆப்த நண்பனுக்கு அழகிய மனைவி வந்தாலும் எனக்கும் சந்தோஷம்தாண்டா!" என்று நான் என் மகிழ்ச்சியைத் தெரிவித்தேன்.

பிறகு மேலும் ஏதேதோ பேசினோம். இருட்டியதும் ஹாஸ்டலுக்குத் திரும்பினோம். அன்று இரவே வெவ்வேறு திசையில் ஊருக்குப் பிரயாணமானோம்.

## 2

என் பெற்றோர்கள் இருந்த ஊரில் நான் பதினைந்து நாட்கள்தான் இருந்தேன். அதற்குள் என் பம்பாய் மாமா வந்துவிடவே, அவருடன் நானும் வேலை தேடும்பொருட்டு பம்பாய்க்குக் கிளம்பினேன். எனக்குச் சதா ராமமூர்த்தியின் ஞாபகமாகவே இருந்தது. பம்பாய்க்குச் சென்று வேலையில் அமர்ந்ததும், மதுரையிலிருந்த ராமமூர்த்திக்குக் கடிதம் எழுதினேன். என் கடிதத்துக்குப் பதிலே கிடைக்கவில்லை. ஒன்று, இரண்டு, மூன்று என நானும் நாலைந்து கடிதங்கள் எழுதிப் போட்டேன். மகாராஜன் பதிலே எழுதவில்லை!

அவன் பதில் எழுதாததில் எனக்கு ரொம்பக் கோபம்தான். எப்பொழுதாவது சென்னைக்குச் செல்லும்பொழுது நேரே மதுரைக்குப் போய் அவனை ஒரு உலுக்கு உலுக்கி விடவேண்டுமென்று தீர்மானித்திருந்தேன். அந்தச் சந்தர்ப்பமும் சீக்கிரமே

பாய்த்து. என் சகோதரியின் கலியாணத்துக்காக லீவு எடுத்துக் கொண்டு சென்னைக்குப் புறப்பட்டேன். கலியாணமானதும் மதுரைக்குப் போய் ராமமூர்த்தியைப் பார்க்க வேண்டுமென்று நான் நினைத்துக் கொண்டிருந்தபோது, சென்னை மூர்மார்க்கெட்டிலேயே நான் அவனைச் சந்திக்கும்படி நேர்ந்தது. ஆனால், பழைய நண்பன் ஒருவனைப் பார்த்ததில் அவன் சந்தோஷம் அடைந்ததாகவே தெரியவில்லை. எதிலுமே பற்றில்லாத யோகியைப் போல் அவன் காணப்பட்டான். நான் அருகில் சென்றதும், "இங்கேதான் இருக்கிறாயா?" என்று சாதாரணமாக விசாரித்தான்.



வடிவு:—டைரக்டர் ஸார்! இந்த பேபி நட்சத்திரங்களை இப்பொழுது சொர்க்கத் தூக்கி வைத்துப் பேசுகிறீர்கள். அவர்கள் வயதானதும் மங்கிப் போய்விடுவார்கள்!

டைரக்டர்:—ஓகோ! நீ ஒரு காலத்தில் பேபி நட்சத்திரமாக இருந்தாயோ?

உடனே நான் தடதடவென்று ஆரம்பித்துவிட்டேன். 'நான் பம்பாயில் வேலையாய் இருக்கிறேன்டா! அங்கே போனதும் உனக்குப் பத்துப் பன்னிரண்டு கடிதங்கள் எழுதினேன்; ஒன்றுக்குமே பதில் போடவில்லையே, நீ? இவ்வளவுதான் உன் சிநேகிதம் போலிருக்கிறது!" என்றேன்.

ராமமூர்த்தி தலையைச் சொறிந்துகொண்டே, "உன் கடிதாசெல்லாம் கிடைத்ததடா, எனக்குத்தான் பதில் எழுதவே பிடிக்கவில்லை!" என்றான்.

"ஏன்டா, அப்படி? பதில் எழுதப் பிடிக்காமல் நான் என்னடா செய்தேன்?"

"நீ ஒன்றும் செய்யவில்லையப்பா! வீட்டுக்கு வாயேன், அந்த இழவையெல்லாம் சவிஸ்தாரமாகச் சொல்லுகிறேன்!" என்று அவன் என்னை மங்களகரமான வசனத்துடன் அழைத்தான்.

போகும் வழியில் அவன் வாயே திறக்கவில்லை. அவன் வாயைத் திறக்கவில்லை என்பதற்காக நான் வாயைத் திறக்காமலிருக்கவும் முடியவில்லை. "ஏன்டா, உனக்குக் கலியாணமாகி விட்டதா?" என்று கேட்டு அவன் மௌனத்தைக் கலைத்தேன்.

"எல்லாம் ஆகிவிட்டது, அப்பா, ஆகிவிட்டது! அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறாய்? நான் வர்ணித்த வர்ணிப்பும், இப்பொழுது எனக்கு வாய்த்திருக்கிற அழகும்... ...அடாடா!" என்றான் அவன்.

பிறகு இருவரும் மௌனமாக வீட்டையடைந்தோம். நாங்கள் வாயிற்படியில் காலை வைத்ததும், முன் ஹாலில் நின்றுகொண்டிருந்த ஒரு பெண் உள்ளே சென்றாள். அவள் ராமமூர்த்தியின் மனைவியாகத்தான் இருக்கவேண்டும் என்று நான் தீர்மானித்துக் கொண்டேன். அதற்குத் தகுந்தாற்போல் அவனும், "இவள்தான் எனக்கு வந்து வாய்த்திருக்கும் ரூபவதி!" என்றான் ஆங்கிலத்தில.

உள்ளே போய் உட்கார்ந்ததுதான் தாமதம், தன் மனதிலிருந்ததை 'தடதட' வென்று சொல்ல ஆரம்பித்து விட்டான் ராமமூர்த்தி. தன் மனைவிக்குப் புரியாமலிருப்பதற்காக அவன் ஆங்கிலத்திலேயே எல்லாவற்றையும் சொன்னான். அதன் மொழி பெயர்ப்புத்தான் இது:—

3

நான் உன்னிடம் பிரமாதமாக அளந்து விட்டு ஊருக்குப் போனேனே, அங்கே வேறுவிதமாகக் காரியங்கள் நடந்துகொண்டிருந்தன. வீட்டு வாசலில் வண்டி நின்றது. நான் என் பெட்டி படுக்கைகளுடன் கீழே இறங்கினேன். வாசலில் நின்று கொண்டிருந்த ஒரு கறுப்புப் பெண் 'விசுக்'கென்று உள்ளே ஓடினாள். முதலில் யார் என்று புரியா விட்டாலும் பிறகு அவள் என் அத்தையின் மகள் கோகிலம் என்று தெரிந்துகொண்டு விட்டேன்.

அன்று மத்தியானம் நானும் அப்பாவும் சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். அம்மா பரிமாறிக் கொண்டே, "வேலைக்குப் போய் அமர்வதற்கு முன்னால் கலியா

ணத்தை நடத்திவிட்டால் நல்லது. உத்தியோகத்திற்குப் போனாலும் போகாததுமாய் லீவு கேட்கவேண்டாம், பாரு!" என்ருள்.

இந்த வார்த்தையைக் கேட்டதும் என் தலையில் கல்லைத் தூக்கிப் போட்டது போல் இருந்தது. நமக்குத் தெரிவிக்காமல் இவர்கள் ஏதோ நிச்சயம் செய்திருக்கிருர்கள் என்று நினைத்த எனக்கு, வாயிலிருந்த சாதத்தை விழுங்க முடியவில்லை. நான் மேலும் திணறும்படியாக அப்பா, அம்மாவுக்குப் பதில் சொன்ருர்:

"ஆமாம், அப்படித்தான் செய்யவேண்டும். நான் இன்றே ஜோஸியருக்குச் சொல்லி யனுப்புகிறேன்!"

நான் என் கோபத்தை அடக்கிக்கொண்டு, "கலியாணமா...? யாருக்கு...?" என்றேன்.

உடனே அம்மா சிரித்துக் கொண்டே, "நல்ல பிள்ளேடா, நீ! யாருக்கு என்கிருயே? உனக்குத்தான் நிச்சயம் பண்ணியிருக்கு! கோகிலம்தான் எனக்கு மாட்டுப் பெண்ணுக வரப்போகிருள்!" என்ருள்.

"கோகிலமா! ஐயே, கோகிலமே...!" என்றேன் நான் வெறுப்புடன்.

உண்மையில் சொல்கிறேன், வாசக! கோகிலம் என்றதும் எனக்குத் தின்ற சோற்றை வாந்தி யெடுத்து விடவேண்டும் போலிருந்தது.

"ஏன்டா, அவளுக்கென்னடா? சித்தெ கறுப்பு! அவ்வளவுதானே? அவள் மூஞ்சியிலே இருக்கிற 'களை' யாருக்கு வரும்?" என்று அம்மா வர்ணித்தாள்.

"குடித்தனம் நடத்தப் போகிறவளுக்கு அழகு எதற்கடா? உங்கம்மா ரொம்ப அழகோ? நான் பண்ணிக் கொள்ளவில்லையா, அவளே? ஏதோ 'பங்கமை' யில்லாமல் இருக்க வேண்டியது, அவ்வளவுதான்! பேசாமல் பெரியவர்கள் சொல்வதைக் கேளு; நான் என் தமக்கைக்கு,'உன்பெண்ணே என் பிள்ளைக்குப் பண்ணிக் கொள்கிறேன்' என்று மரணப் படுக்கையில் வாக்குறுதி கொடுத்து விட்டேன். நீ மாட்டேனென்று சொன்னுல் மகா பாபம், மகா பாபம்!" என்று அப்பா கதறினர்.

"என்னைக் கேட்காமல் நீங்கள் இந்த மாதிரி யெல்லாம் ஏற்பாடு செய்வதா?



முடியாது; நான் பண்ணிக்கொள்ள முடி யாது!" என்று நான் அலறினேன்.

"இந்தாடா, பயலே! சும்மா இந்தமாதி கத்திக்கொண்டு இருக்காதே! இஷ்டமிரு தால் அவளைக் கலியாணம் பண்ணி கொண்டு இந்த வீட்டில் இரு; இல்ல விட்டால் என் கண்ணில் படாமல் எங்க வது தொலைந்து போ!" என்று அப்ப சொல்லிவிட்டார்.

"என்னடா, கலியாணம் செய்து கொ வது நம் இஷ்டத்தைப் பொறுத், தில்லையா? குழந்தைக்கு விளக்கெண்ணெ புகட்டுவது போலல்லவா இருக்கிறது இவர்கள் கோகிலத்தைக் கலியாணம் செய் கொள்ள வேண்டுமென்பதும்!" என் எண்ணிய எனக்கு, வீட்டில் இருக்கவே பிடிக்கவில்லை. சைக்கிளை எடுத்து கொண்டு படுவேகமாகக் கிளம்பினேன். கடைத்தெரு திருப்பத்தில் சைக்கிளு நானுமாகப் பல்டியடித்து விட்டோம். விழு ததில் பலத்த அடியில்லாவிட்டாலும் உட பெல்லாம் சிராய்த்து விட்டது. மன புண்ணுடன் சரீரப் புண்ணும் சேர்ந் கொள்ளவே, சொல்லமுடியாத வேதனை யுடன் சைக்கிளைத் தள்ளிக்கொண்டு வீட் டிற்கு வந்து சேர்ந்தேன்.

நான் உள்ளே நுழைந்ததும் அம்ம என்னைப் பார்த்தாள். என் துணியை யும், நான் ஆடி ஆடி வருவதையு பார்த்ததும் அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. "என்னடா, என்னடா...!" என்று தவித்துக் கொண்டே என் அருகில் வந்தாள். நான் அங்கு கிடந்த பெஞ்சியில் படுத்துக்கொண்டே விஷயத்தைக் கூற் னேன். உடனே ஆரம்பித்து விட்டாள் அம்மா. "பார்த்தாயா? இதெல்லாம் அடம் பிடிக்கிறதினுலே வாறதான்டா தெய்வகுற்றம் விடுமா?" என்று கூறிக்கொண்டே ஒரு மஞ்சள் துணியில் காலணவை வைத்து முடி தாள். முடியும்பொழுது என்ன சொன்னுள் என் கிருய்? "என் அம்மா என் குழந்தையை ஒன்றும் பண்ணுதே! அவன் ஏதோ சிறுபிள்ளை சொல் லுகிருன். நாங்கள் உன்னிடம் சொன்ன படியே செய்து வைக்கிறேம்!" என்று தன் சாத்தனுரைப் பிரார்த்தித்துக் கொண்டாள்.

அம்மாவின் பிரார்த்தனை எனக்கு ஆ ரியத்தை உண்டுபண்ணியது. இந்த விஷ

ங்களிலெல்லாம்
னக்கு நம்பிக்கை
ல்லாததால், 'ஏதோ
வறி விழுந்து
ட்டேனென்றால்
ன் இப்படி அமர்க்
ளம் பண்ணுகிறாய்?
தய்வ குற்றமு
ல்லை, ஒன்று
ல்லை!' என்றேன்.

'' அட, பாவிப்
ன்னே! உனக்கு
தடா! வேறே எதா
ம் உடம்பைப்
ஒத்திவைக்கப்
போகிறது!'' என்று
ம்மா நடுங்கினாள்.
ண்தான் வைக்கி
த் தாறுமாறாக
ட்டி மோதிக்
காண்டேனென்
ம், தெய்வம் ஒன்
ம் செய்யவில்லை
யன்றும் ஆயிரம்
றை படித்துப்
டித்துச் சொன்
னேன். அம்மா அசைந்து கொடுக்க
ல்லை. தன் பல்லவியையே பாடிக்கொண்
ருந்தாள்.

அதற்குத் தகுந்தாற்போல் நானும்
கத்தை 'உம்'மென்று வைத்துக்கொண்டு
றைப்பாக நடந்து தலையை கீலைப்
டியில் மோதிக் கொள்வேன்; பாதி
ருக்குமிடம் ஞாபகம் இல்லாமல் 'திடுதிடு'
வென்று ஓடி மண்டையை உடைத்துக்
காள்ளப் பார்ப்பேன். இதெல்லாம் அம்
ாவின் அழுகைக்குச் சௌகரியமா
ருந்தது. அந்த அழுகையிலே முக்கால்
ாதி என் மனம் கரைந்துவிட்டது. இருந்த
பாதிலும் 'உங்கள் இஷ்டப்படியே செய்
க்கள்' என்று சொல்ல எனக்குப் பிடிக்க
ல்லை. சொல்லாமல் கொள்ளாமல் எங்கே
ாவது புறப்பட்டுப் போய்விடுவது என்ற
ர்மானத்துடன் அன்றிரவு படுத்தேன்.
ள்ளிரவில் யாரோ அலறுவது கேட்டுவிழித்
தெழுந்தேன். அம்மா தலைவிரி கோலமாய்த்
ன் படுக்கையிலே எழுந்து உட்கார்ந்து,
அடி, அம்மா! என் பிள்ளையை ஒன்றும்
ண்ணாதே! அவன் உன் பெண்ணைப் பண்
ணிக் கொள்வான் — ஒன்றும் பண்ணாதே!
ன்றும் பண்ணாதே!'' என்று கன்னத்தில்
பாட்டுக் கொண்டிருந்தாள்.



''கனபாடிகளே! என்ன இப்படித் துரும்பாய் இளைத்துப் போய்விட்டீர்களே? ஒரு வேளை, ஒன்பது நாள் உண்ணாவிரதம் இருந்த பெரியவர் தாங்கள் தானோ?''

அப்பா ஓடி வந்தார். ''என்ன, என்ன?'' என்று பரபரப்புடன் கேட்டார். ''ஒன்றுமில்லை, உங்கள் தங்கை ராமுவை மிரட்டுகிற மாதிரி சொப்பனம் கண்டேன் — ஐயோ! இவன் பிடிவாதம் பிடிக்கிறானே!'' என்று அம்மா புலம்பினாள்.

எனக்குத் தலைவேதனையாயிருந்தது. அம்மாவின் அன்பானது என் நெஞ்சைப் பிடித்து உலுக்கியது. நான் அத்தையின் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளாவிட்டால், அவள் என்னைக் கொன்று விடுவாளென்பது அம்மாவின் அபிப்பிராயம். நான் வேண்டாமென்றால் அம்மாவுக்குப் பயித்தியமே பிடித்து விடும்போலிருந்தது. ஆதலால், மறுநாள் பொழுது விடிந்ததும் என் கற்பனை மோகினியைத் தூரத் தள்ளி விட்டுக் கோகிலத்தை ஏற்றுக் கொள்வதாகச் சொல்லிவிட்டேன். அந்தக் கோகிலத்துடன்தான் இப்பொழுது நான் சம்சார வாழ்க்கை நடத்துகிறேன். ஆனால் என்னைப் பொறுத்த மட்டில் இன்றுவரை நான் சந்நியாசியாகவே காலம் கழித்து வருகிறேன்.

## 4

இந்தக் கதையைக் கேட்டதும் அவனிடம் எனக்கு அனுதாபம் ஏற்பட்டது. பிராப்தத்தின்மேல் பழியைப் போட்டு நான் அவனுக்கு ஆறுதல் கூறிவிட்டு, பம்பாய்க்குத் திரும்பினேன்.

இந்தச் சம்பவம் நிகழ்ந்து ஒன்றரை வருஷங்களாகிவிட்டன. நான் சென்னைப் பக்கமே செல்லவில்லை. ராமமூர்த்தியின் சமாசாரமும் எனக்குத் தெரியவில்லை. திடீரென்று ஒருநாள் தந்தி வந்தது. என் அம்மாவுக்கு உடம்பு சரியில்லையென்றும் உடனே வரும்படியாகவும் தந்தியில் கண்

டிருந்தது. நான் சென்னைக்குப் புறப்பட்டேன்.

எங்கள் ஊர் சென்று என் தாயாரைப் பார்த்தேன். கவலையேயாக நான் சென்று பதினைந்து தினங்களில் உடம்பு குணமாகிக் கொண்டு வந்தது. எனக்கு லீவு அதிக நாட்கள் கிடைக்காததால் ஊருக்குக் கிளம்பினேன். ராமமூர்த்தியைப் பார்த்துவிட்டுப் போக வேண்டுமென்ற ஆவல் என் உள்ளத்தில் இருந்துகொண்டே யிருந்தது. ஆதலால் சென்னைக்குத் திரும்பிய நான் அவன் வீட்டிற்குச் சென்றேன்.

எதிர்பார்த்ததற்கு மாறாக அசாத்திய உற்சாகத்துடன் என்னை வரவேற்றான் ராமமூர்த்தி. பிறகு, இருவரும் உள்ளே சென்று உட்கார்ந்தோம். அங்கே ஒரு குழந்தை விளையாடிக் கொண்டிருந்தது. ராமமூர்த்தி அதைத் தூக்கித் தன் மடியில் வைத்துக்கொண்டு, "இதோ பாரு! இது யாரு, சொல்லு...? மா...மா! சொல்லு!" என்று கொஞ்சினான்.

குழந்தை என்னைப் பார்த்துச் சிரித்தது. "இவன் என் பயல்!" என்று ராமமூர்த்தி தன் குழந்தையைப் பெருமையுடன் எனக்கு அறிமுகம் செய்து வைத்தான்.

"அட, சந்நியாசிக்குக் குழந்தைகூட பிறப்பதுண்டா, என்ன?" என்று நான் கேலியாகக் கேட்டேன்.

"அது அலாதி விஷயம்! இப்பொழுது கேள், 'உன் மனைவியிடம் உனக்குப் பற்றுதல் உண்டா?' என்று; உண்டு என்பேன். எப்படி என்று கேட்பாய்; எல்லாவற்றுக்கும் காரணம் இந்தப் பயல்தான். இத்தனை நாள் அவள் என் மனைவியாக இருந்தாள்; இப்பொழுது தாயாகவும் ஆகி விட்டாள். 'அதோ, அம்மா பாரு!' என்று சொல்லும்பொழுது, இவன் என் அறிவின்மையை எடுத்துக் காட்டுவது போலிருக்கிறது; கறுப்புத்தோல் போர்த்த அந்த உடலிலும் ஆத்மா இருக்கிறது என்று சுத்திக் காட்டுவதுபோலிருக்கிறது......!" என்று தன் மனைவியைப் பற்றி உணர்ச்சியுடன் அடுக்கிக்கொண்டே போனான் ராமமூர்த்தி.

தன் மனைவியிடம் அசாத்திய வெறுப்புக்கொண்டிருந்த அவன் மனதில், அந்த குழந்தை அன்பு என்னும் அமுதத்தை சுரக்கச் செய்திருப்பது கண்டு நான் வியந்தேன்.

எங்கும் இப்படித்தானோ என்னவோ!

## ★ ★ ★ ★ ★ ★ ★ தீன சேவா சங்கம் ★ ★ ★ ★ ★ ★



நம் நாட்டு வருங்காலப் பிரஜைகள் ஒழுக்கம் படைத்த கண்ணியர்களாகவும் உறுதி கொண்ட தோளினர்களாகவும் இருக்க வேண்டுமானால் நம் அடிப்படைக் கல்வித் திட்டம் மாறவேண்டும்.

மாணவர்களுக்குப் புத்தர் பிரானது அன்பு மதத்தைப் போதிக்கும்போது பீமனது பராக்கிரமத்தையும் போதிக்க வேண்டும். மழையின் குளிர்ந்த தன்மையைச் சொல்லித் தரும்போது இடியின் கர்ஜனையையும் சொல்லித் தரவேண்டும்.

இத்தகைய உயரிய முறையில் பெங்களூர் தீனசேவா சங்கம் ஒரு சேவா ஆசிரமத்தை நிறுவி அதன் மூலம் இணையற்ற தொண்டாற்றி வருகிறது. ஆசிரம நிர்வாகிகள் தொழிற் கல்வி, இயற்கை போதனை முறை, தேகப் பயிற்சி, சங்கீதம், நடனம் முதலிய பல துறைகளிலும் வகுப்புகள் வைத்து நடத்தி வருகின்றனர். நடனத்தில் ஆர்வம் உள்ள மாணவ மாணவிகளுக்கு விசேஷ வகுப்புகள் நடத்தப்படுகின்றன. மேற்படி நடன வகுப்பைச் சேர்ந்த மாணவிகளின் சிவ பார்வதி நடனத் தோற்றத்தை இங்கு காணலாம்.

இத்தனை வகுப்புகளையும் நடத்தப் போதுமான இடம் வேண்டாமா? அதற்குப் பத்தாயிரம் ரூபாய் செலவில் ஒரு கட்டடம் நிர்மாணிக்க மேற்படி தீன சேவா சங்கம் முயற்சி எடுத்திருக்கிறது. இம் முயற்சி வெற்றி அடைய எல்லோரும் தாராளமாக நிதி வழங்க வேண்டும். தீனர்களுக்குச் செய்யும் சேவையே தெய்வ சேவை; கல்விக்குச் செய்யும் தொண்டே கடவுள் தொண்டு.



# ஜுரத்திற்கு பிறகு-

## ஓவல்டின்

### பூர்ண குணம்பெற உதவுகிறது

ஜுரத்திற்குப் பிறகு நீங்கள் இழந்த பலத்தையும் ஆரோக்கியத்தையும் விரைவில் பெற "ஓவல்டின்" அருந்த வேண்டும். இது தேகத்துக்கும் மூளைக்கும் உற்சாகமூட்டுகிறது. இதில் சத்துமிகுந்த பார்லி, பால், கொகோ, இயற்கைச் சத்துக்கள், வைட்டமின்கள் அடங்கியிருக்கின்றன.

"ஓவல்டின்" எளிதில் ஜீரணமாகக் கூடியதால், ஜுரத்திற்குப் பிறகு அதை அருந்தினால் உங்களுக்கு மீண்டும் அசௌகரியம் ஏற்படாது.

இழந்த பலம் மீண்டும் பெற்று ஆரோக்கியம் காணுவீர்கள். ஜாக்கிரதை! போலிகளை வாங்காதீர்கள்.

# 'OVALTINE'

## 'ஓவல்டின்'

ஜுரத்திற்குப் பிறகு தகுந்த பானம்




டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:

க்ரஹாம்ஸ் ட்ரேடிங் கம்பெனி (இந்தியா) லிமிடெட்., த. பெ. நெ. 1205, மதராஸ். மற்றும் பம்பாய், கராச்சி, கல்கத்தாவிலும். தி இங்லிஷ் & ஸ்காட்டிஷ் ஜாயிண்ட் கோஆபரேடிவ் ஹோல்ஸேல் சொஸைட்டி லிமிடெட், கள்ளிக்கோட்டை (மலபார் கோஸ்டுக்கு)

OV. 283

# விகாரமான வேக்காடு மறைகிறது



## கிட்டத்தட்ட புத்திக் கோளாறுதான்!

"சில மாதங்களுக்கு முன் சரும வேக்காட்டினால் மிகவும் அவஸ்தைப் பட்டேன். அதுவும் இரவு நேரத்தில் படுத்திருக்கும்போது பைத்தியம் பிடித்ததுபோலவே இருந்தது. உங்களது விசித்திர தயாரிப்பாகிய வெல்டர்மாவுக்குப் பெரிதும் நன்றி செலுத்த வேண்டுமென்று நான் மனப்பூர்வமாகக் கூறுவேன். வெல்டர்மாவை சில தடவைகள் உபயோகித்த பிறகுதான் வெந்த சருமம் பூரணமாக சொஸ்த மடைந்தது. அநேக இதர மருந்துகளை உபயோகித்தேன். ஆனால் வெல்டர்மாவுக்கு இணை வேறெதுவும் கிடையாது என்பதே என் உறுதி. எனக்குப் பிடித்தமருந்து அதுதான்." —மிஸ். F. D. ஏஞ்சல்

### இருவித கிருமி நாசன வேலை

சருமத்தின்மேல் முதல் தடவையாகப் பட்டவுடனேயே வெல்டர்மாவின் இருவித கிருமி நாசன சக்திகளும் வேலை செய்யத் தொடங்குகின்றன. அநேக சரும ரோகங்களுக்கு ஆஸ்பதமான பல்வேறு ரக கிருமிகளை துரித வேகத்தில் கொன்று நாசமாக்குகின்றன. அதிலுள்ள கிருமி நாசன சக்திகள் இரண்டும் பல்வேறுவித விஷக் கிருமிகளுக்கு இரண்டு சத்துருக்களாகும்.

### சருமத்தினூடே செய்யும் வேலை

எரிச்சல் அடங்குகிறது. தமைச்சலும் வேக்காடும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடுகின்றன. சருமம் சுத்தமாகவும் சுகமாகவும் ஆகிவிடுகிறது. எக்ஸிமா, கொப்புளங்கள், வேக்காடுகள், பருக்கள், மற்றும் சருமத்திற்கு அடியில் ஏற்படும் இதர ரோகங்களெல்லாம் சொஸ்தமாகின்றன. ஏனெனில், வெல்டர்மா சருமத்தினூடே சென்று ரோகத்திற்கு மூலாதாரமான இடத்திலேயே தாக்குகிறது.

நீரில் - எண்ணைச் - சேர்க்கையெனும் அடிப்படையில் தயாரிக்கப் பட்டிருப்பதால் கோய்ப்பட்ட இடத்திலுள்ள விஷத்தை வடிகட்டி வெளியேற்றுகிறது வெல்டர்மா. ஆகையால் மீண்டும் நோய் தொத்தி விடாமல் பாதுகாப்பளிக்கிறது. வழுவழுப்பான வெல்டர்மா பிசுக்கற்றது. கறை படாது, உபயோகித்த இடம் புலனாகாது. ஆகையால் எந்த இடத்திலும் எந்த நேரத்திலும் உபயோகிக்கலாம். எல்லா சிறந்த கெமிஸ்டுகளிடமும், டீலர்களிடமும் கிடைக்கும்.

இந்தியாவின் பூரண விநியோகஸ்தர்கள்
ஜியாப்ரே மானர்ஸ் அண் கோ., லிமிடெட்
பம்பாய் — கல்கத்தா — டில்லி — மதராஸ்




DOUBLE-ANTISEPTIC
**Valderma**
THE Non-Greasy BALM

# கம்பர் தரும் காட்சி

**டி. கே. சி.**

## 243. இனி பேச்சு இல்லை!

"உடனே அந்தப் பகைவர் இருக்கிற இடத்துக்கு நடக்க வேண்டும்; அப்படியே அவர்களைக் கொல்ல வேண்டும்" என்று பேசி முடித்தான் துன்முகன்.

துன்முகன் பேசி முடித்த மாத்திரத்தில் மாபெரும் பக்ஷன் என்ற வீரன் துன்முகனைப் பார்த்துப் 'பேச்சை நிறுத்து' என்று கையினால் ஜாடை காட்டி விட்டுப் பேச ஆரம்பிக்கிறான்: "இனி நமக்கு கோபமாவது வீரமாவது, ஒன்றும் இல்லை."

காவலன் கண்எதிர்
அவனைக் கைகவித்(து),
'யாவதுண் டினி நமக்(கு)'
என்னச் சொல்லினன்:
'கோபமும் வன்மையும்
குரங்குக்கே' எனு,
மாபெரும் பக்கன்என்(று)
ஒருவன் வன்மையான்.

[காவலன் கண் எதிர்: ராவணனுக்கு எதிர்த்தாமே; அவனைக் கைகவிந்து: துன்முகனைப் பேச்சை நிறுத்தச் சொல்லி; வன்மை: வீரம்; குரங்குக்கே எனு: நமக்கில்லைதான் என்று கோபமாய்ச் சொன்னான்; பக்கன்: பக்ஷன்.]

குறிப்பு:—'கோபமும் வீரமும் குரங்குக்குத் தான் நமக்கேது?' என்று கோபாவேசத்தில் ஏளனம் பண்ணுகிற காரியம் வெகு ரஸமானது.

∴

அந்த சபையில் மாபெரும் பக்ஷன் மேலும் சொல்லுகிறான்:

"நம்முடைய முன்னோர்களிடம் அரிய வீரம் இருந்தது. அவர்களில் சிலர் யுத்தம் செய்து உயிரை விட்டார்கள். அப்படி உயிரை விட்ட போது அவர்களுடனேயே நடந்து போய் விட்டதோ அந்த வீரம்?"

'முந்தினர் முரண்டு,
சிலவர் மொய்அமர்
நந்தினர் தம்மொடு
நனி நடந்ததோ;
வந்தொரு குரங்கிடு
தீயின் வன்மையால்
வெந்ததோ, இலங்கையோ(டு)
அரக்கர் வெம்மையும்.

[முந்தினர்: தம்முடைய மூதாதைகளான வீர அரக்கர்; முரண்: வீரம்; சிலவர் மொய் அமர் நந்தினர் தம்மொடு: தொடர்ந்து செய்த யுத்தத்தில் சிலர் இறந்து விட்டனர், அவருடன்; நனி நடந்ததோ: வானுலகை நோக்கிக் கம்பி நீட்டி விட்டதோ அந்த முரண்; தீயின் வன்மையால்: அனுமன் கொளுத்திய தீயின் வன்மையால்; வெந்ததோ இலங்கையோடு அரக்கர் வெம்மையும்: அனுமனிட்ட தீ அவ்வளவு பொல்லாதது. அதன் வேகத்தால் அரக்கரது வீரம் இனியும் வெந்துபோய் விட்டதோ—இலங்கையோடு தான்!]

குறிப்பு:—ஒரு தீ மற்றொரு தீயை அழித்து விட்டதோ!—அலங்கார பாவம் அழகாய் வந்திருக்கிறது செய்யுளில்.

∴

"மனுஷன் குரங்கை ஏவுவதாம், அந்தக் குரங்கு வந்து நம்முடைய ஊரை எரித்து விடுவதாம்; அழகு அழகு! வெகு அழகு!"

‘மானிடர் ஏவுவார்,
குரங்கு வந்திவ்வூர்
தான்எரி மடுப்பது!
நிருதர் தானையே
ஆனவர் அதுகுறித்(து)
அழுங்குவார்! எனின்,—
மேல்நிகழ் வதற்கினி
விளம்பல் வேண்டுமோ?’

[நிருதர் தானையே ஆனவர்: ராக்ஷஸ வீரர்களாகவே ஆகிய சேனை; அது குறித்து அழுங்குவார் எனின்: தீ வைத்து விட்டுப் போனதையே எண்ணி எண்ணிப் பயந்து சோர்வார்கள் என்று ஏற்பட்டு விட்டால்; மேல் நிகழ்வது: நாம் அதோகதி தானே]

• • •

கோபம் மேலும் பொங்குகிறது மாபெரும் பக்ஷனுக்கு.

“இந்த விதமாக ஒரே படியாய் நின்று பேசிக் கொண்டிருக்கிறேனே, இந்தப் பேச்சு இனிமேல் இல்லை. வேறு என்னத்தை எண்ண?”

‘நின்றுநின் றிலைசில
விளம்ப நேர்கிலேன்:
நன்றினில் நரரொடு
குரங்கை நாம்அறக்
கொன்றுஇன்(று) அல்ல(து)ஓர்
என்றும் கூடுமோ’
என்றனன் இகல்குறித்(து)
எரியும் கண்ணினான்.

[நன்றினில்: நல்ல முறையில்தானே; இகல் குறித்து எரியும் கண்ணினான்: யுத்தத்தை எண்ணின மாத்திரத்தில் கண் அக்னிபோலச் சிவந்துவிட்டது அரக்கனுக்கு.]

மனிதரையும் குரங்கையும் இன்றொழிய அறிவு தோற்றப்படாது போலிருக்கிறதே என்று சொல்லத் தோன்றுகிறது ஆங்காரத்தாலும் அவமானத்தாலும் மாபெரும் பக்ஷனுக்கு.

## அது என்ன பாஷை?

குடகு தேசம் கன்னட நாட்டுக்குப் பக்கத்தில் இருக்கிறது. ஆகையால், குடகு மக்களுக்குப் பொதுவாகக் கன்னட பாஷை தெரிந்திருப்பது இயற்கை யல்லவா?

நம்முடைய முதல் இந்திய சேனாபதி ஜெனரல் காரியப்பா குடகு தேசத்துக்காரர். வெகு காலம் இந்திய ராணுவத்தில் இருந்ததால், அவருக்குத் தம் தாய்பாஷையைவிட ஆங்கிலத்தில் நல்ல திறமையும் பழக்கமும் உண்டு. ஆனால், தமக்குக் கன்னடமும் தெரியும் என்பதாக அவருக்கு ஒரு எண்ணம் இருந்தது. ஒரு தடவை அவர் ஒரு இந்தியப் பட்டாளத்தைப் பார்வையிடும்போது, அங்கே கன்னட சிப்பாய்கள் இருப்பதைக் கண்டார். உடனே அவர்களுடன் கன்னடத்தில் பேச வேண்டும் என்று அவருக்கு ஆசை உண்டாயிற்று.

ஒரு கன்னட வீரனைப் பார்த்து, “அப்பனே! நீ சௌக்கியமாயிருக்கிறாயா? உனக்கு வேண்டிய வசதி எல்லாம் கிடைத்து வருகிறதா?” என்று கன்னட பாஷையில் கேட்டார்.



அந்தச் சிப்பாய் ஒன்றும் விளங்காமல் காரியப்பாவைப் பார்த்து விழித்தான். காரியப்பா மீண்டும் ஒரு முறை அவனைப் பார்த்து, அதே கேள்வியைக் கேட்டார். சிப்பாய் மறுபடியும் ஒரு தரம் விழித்துவிட்டு, “முஜே அங்ரேஜி நஹி மாலும், ஸாப்!” (எனக்கு ஆங்கிலம் தெரியாது, ஐயா!) என்று சொன்னான்.

ஜெனரல் காரியப்பா தம்முடைய கன்னட பாஷை தானாக எந்நிலையது என்பதைத் தெரிந்து கொண்டார்!



உலகப் பிரசித்தி பெற்ற ஜாம்பக் உபயோகிப்பதனால்

## தசை வலியும், நோவும்

**மாயமாய் மறைகின்றன**

இலேசாக ஜாம்பக் தேய்த்தவுடனேயே ஆச்வாசம் ஏற்படுகிறது. அதி ஆச்சரியகரமான இந்த மூலிகைக் களிம்பிலுள்ள உயர்ந்த மருந்துத் தைலங்கள் சருமத்தின் ஊடே சென்று வாடி வதங்கி வலியுறும் தசைகளுக்கு குணமாகும்படி இதமளிக்கிறது. எத்தகைய தசைப் பிடிப்பு, தசை வலி, மூட்டுப் பிடிப்பு, பாதங்களில் வெக்காடு, வலி ஆகிய உபாதைகளுக்கும் ஜாம்பக் ஒரு சிறந்த ஔஷதம். மிருகக் கொழுப்பு கலப்பற்றது என்பதற்கு உத்தரவாதம்.




எப்போதும் உபயோகியுங்கள்

# Zam-Buk

No. 2

ஆறுதலளித்து குணமாக்கும் கிருமிநாசனக் களிம்பு

---

# கோல்கேட் பற்பசை

பல் வைத்தியர்கள் கோல்கேட் பற்பசையையே சிபார்சு செய்கின்றனர். பத்தில் ஏழு சம்பவங்களில் வாயில் ஏற்படும் துர்நாற்ற சுவாசத்தை கோல்கேட் உடனடியாக நிறுத்தி விடுகிறதென்று ரசாயன ஆராய்ச்சிகள் மூலம் நிரூபிக்கப்பட்டுள்ளது.

கோல்கேட்டிலுள்ள விறுவிறுப்பான நுரை பற்களின் இடையேயுள்ள இடுக்குகளிலும் சென்று — அங்கு அடைந்து அழுகும் ஆகாரத் துணுக்குகளை வெளியேற்றி உமிழ் நீரை சுத்தப் படுத்தி — கெட்ட சுவாசத்தின் மூலகாரணத்தையே அகற்றுகிறது. கோல்கேட்டிலுள்ள மிருதுவான பளபளப்பூட்டும் பொருள் எனாமலை [illegible]தாகவும், கேடு விளைவிக்காமல் துப்புரவாகவும் சுத்தப்படுத்துகின்றது.





# சித்த புருஷர்

கிரிஜா

பொழுது விடிந்தால் என் கடைசிக் குமாரன் கண்ணகோபாலனுக்கு ஆண்டு நிறைவுக் கலியாணம். முதல் நாளே வீடு முழுவதும் கோலாகலமாக இருந்தது. என் அம்மாயியின் முகத்தில் பொலிந்த ஆனந்தத்தை விவரித்து மாளாது. என், மாமாவும் அப்படியே. என் கணவர் மட்டும் ஏதோ எழுத்து வேலையில் முனைந்து உட்கார்ந்திருந்தார். குழந்தை கண்ண கோபாலன் அவர் காலடியில் உட்கார்ந்து விளையாடிக் கொண்டிருந்தான். இரைக்க, இரைக்க ஓடிவந்த என் மூத்தபிள்ளை பாலு, "அம்மா! மடத்திலே ஒரு சாமியார் வந்திருக்கிறாரே, அவர் எல்லா வியாதிகளையுமே போக்கி விடுவாராம்! இது முழுப் பொய்தானே, அம்மா? அவர் சும்மா வேஷந்தானே போடுகிறார்?" என்று கேட்டவண்ணம், அவிழ்ந்த வேஷ்டியைக் கையிலே பிடித்துக்கொண்டு, பதிலுக்காக என் முகத்தை ஆவலோடு பார்த்துக் கொண்டு நின்றான். பின்னால் ஓடிவந்த என் பெண் கமலா, "பாரம்மா, இவனை! பெரியவர்களை—அதுவும் ஒரு சாமியாரைப் பழிப்பார்களா, அம்மா?" என்றாள். "ஆமாம், பாலு, பெரியவர்களைப் பழிக்கவே கூடாது" என்று சொல்லிக்கொண்டே, கண்ணனைத் தூக்கிக்கொண்டு எழுந்தார் என் கணவர்.

"பின்னே எல்லாரும் அப்படிச் சொல்கிறார்களே, அப்பா?" என்று ஊராருடைய அபிப்பிராயத்தை ஒரு கேள்வி மூலம் எங்கள் முன் கொண்டுவந்தான் குழந்தை பாலு.

என் கணவர் சிரித்துக் கொண்டே, "வா, போய் அந்தச் சாமியாரையே கேட்போம்!" என்று சொல்லியவாறு குழந்தைகளுடன் வெளியே கிளம்பி விட்டார்.

'சாமியார்' என்றவுடன் என் கணவருக்குத்தான் எத்தனை ஆனந்தம்! சித்த புருஷர்களையும் யோக புருஷர்களையும் 'வேஷதாரிகள்' என்று சொல்லி விடுவது எவ்வளவு தவறு! இதை நினைத்ததும் என் சிந்தனை பின்னோக்கிச் சென்றது.

• • •

ஏராளமான ஆஸ்திகளுக்குச் சொந்தக்காரரான என் தாத்தாவுக்கு, 'ஆசைக்கொரு பெண்ணும், ஆஸ்திக்கொரு பிள்ளையு'மாக என் அம்மாவும், மாமாவும் பிறந்தார்கள். அறிவுக்கு வேண்டிய அளவு கல்வி பயின்ற மாமாவை, ஆஸ்தி தேடுவதற்காக அயலூருக்கு அனுப்பாமல் வீட்டோடு வைத்துக் கொண்டார் தாத்தா. ஆசைப் பெண்ணை மட்டும் புக்ககத்திற்கு அனுப்பிவிடுவாரா, என்ன? என் அப்பா தான் வேட்டகத்திற்கு வந்து சேர்ந்தார்.

பெண் வயிற்றுப் பெண்களாக நானும் வனஜாவும் பிறந்தோம். பிள்ளை வயிற்றுப் பிள்ளைகளாக ராஜும் அம்மாஞ்சியும், வேறு அம்மாஞ்சியும் எங்களுக்கு முன்னாலேயே பிறந்திருந்தார்கள். எங்கள் மழலை விளையாட்டைக் கண்டு மகிழ்ந்த இரு குடும்பத்தினரும் ஒன்றாகவே காலத்தைக் கடத்தி வந்தார்கள். இப்படியே சென்று விட்டால் காலத்திற்குத்தான் வேறு வேலை வேண்டாமா?

தாத்தாவிடம் கொஞ்சம் மனத்தாங்கல் கொண்ட மாமா வேட்டகத்திற்குப் போய் விட்டார். அம்மா மட்டும் சும்மா இருப்பாளா? 'நானும் தான் புக்ககத்தைக் கண்ணால் பார்த்து விட்டு வருகிறேனே!' என்று அப்பாவுடன் கிளம்பி விட்டாள்.

மதுரையில் என் அப்பாவுக்குச் சொந்தமாக அவ்வளவு பெரிய அழகான பங்களா இருக்குமென்று நான் கனவில்கூட நினைக்கவில்லை. 'கேட்'டைத் தாண்டி அடி வைத்ததும், வானோங்கி வளர்ந்து நின்ற அந்த மகிழ மரம் என் உள்ளத்தையே கொள்ளை கொண்டு விட்டது. அந்த நிமிஷமே ராஜும் அம்மாஞ்சியின் நினைவு வந்து என் மனதை வேதனை செய்தது.

வசீகரமான முகமும், கலகலப்பான பேச்சும் கொண்ட ராஜும் அம்மாஞ்சியிடம் எங்கள் எல்லோருக்குமே தனிப்பிரியம். அவன் சென்னைக்குப் போனபிறகு தாத்தாவின் வீட்டிலே எங்களுக்கு இருக்கவே பிடிக்கவில்லை. இங்கு வந்த பிறகு, அதுவும் இந்த அழகான பங்களாவைப் பார்த்த பிறகு, 'அம்மாஞ்சியும் இல்லையே' என்று என் மனம் ரொம்பவும் ஏங்கியது. மாமாவுக்கு எழுதி, விடுமுறைக்கு இங்கு அம்மாஞ்சிகளை வரவழைப்பதாக அப்பா சொன்ன பிறகுதான் சற்று ஆறுதலடைந்து நாங்களும் கல்லூரியில் சேர்ந்து, படிப்பும் பாட்டும் கற்றுக் கொள்ளத் தொடங்கினோம்.

எப்படியோ நாட்கள் ஓடி விடுமுறைக்கு அம்மாஞ்சிகள் இருவரையுமே அனுப்பி வைத்தார் மாமா. எங்கள் குதூகலத்துக்கு எல்லையே இல்லை. வந்து இறங்கியவுடனேயே அவர்களை அழைத்துக் கொண்டு, பங்களா முழுவதும் சுற்றிக் காட்டினேன். கடைசியில் மகிழ மரத்தடியில் வந்து உட்கார்ந்து பேச ஆரம்பித்தோம். வேறு அம்மாஞ்சி, "எங்கள் சென்னை பங்களா இதைவிட அழகானது!" என்று பெருமையாகச் சொன்னான். அவன் அப்படிப் பெருமையடித்துக் கொண்டது எனக்குத் துளிக்கூடப் பிடிக்கவில்லை. "சும்மா அளக்காதே, கிறுத்துடா!" என்று அவனை அடக்கிய ராஜும் அம்மாஞ்சி என்னைப் பார்த்துச் சிரித்தவண்ணம், "பத்மஜா! எனக்கு இந்த பங்களாதான் ரொம்பப் பிடித்திருக்கு" என்றான் அன்பு கனிந்த குரலில். அப்புறம் வெகு நேரம் வரை என்னென்னவோ விஷயங்களைப் பற்றிப் பேசினோம். இப்படியே விடுமுறை நாட்கள் வெகு இன்பமாக ஓடிவிட்டன. அம்மாஞ்சிகள் ஊருக்குப் புறப்பட்ட அன்று அம்மாவின் கண்கள் கூடக் கலங்கிவிட்டன.

"என்ன அத்தை, நீங்கள் கூட வருத்தப் படலாமா? நான்தான் சீக்கிரமே உங்கள் மாப்பிள்ளையாக இங்கு வந்துவிடப் போகிறேனே!" என்று சிரித்துக் கொண்டே ராஜும் அம்மாஞ்சி சொன்னதும், அம்மா 'களுக்' கென்று சிரித்து விட்டாள்.

இந்தப் பேச்சு ஒன்றும் புதிதல்ல! எனக்கு நினைவு தெரிந்த நாளாக வீட்டில் அடிக்கடி அடிபடும் பேச்சுத்தான். ஆனாலும், அன்று அம்மாஞ்சியின் வாயிலிருந்து வந்த வார்த்தைகளும், அவன் பார்த்த அன்பான பார்வையும் என்றுமே மறக்க முடியாதபடி என் மனதில் பதிந்து விட்டன.

அந்த விடுமுறைக்குப் பிறகு பல விடுமுறைகள் சென்று விட்டன. ஆனால், அம்மாஞ்சிகள் அப்புறம் எந்த விடுமுறைக்கும் வரவேயில்லை! மாமா ஏதேதோ சாக்குப் போக்குச் சொல்லி அனுப்பாமல் இருந்து விட்டார்! மாமாவின் வேட்டகத்திற்கு எங்களை அனுப்ப அம்மாவுக்கும் இஷ்டமில்லை. அதனால் எங்கள் சந்திப்பு இடையில் நான்கு வருஷங்கள் வரை தடைப்பட்டு விட்டது.

இப்போது அம்மாஞ்சிகளோடு கை கோர்த்துக்கொண்டு விளையாடும் சிறுமிப் பருவத்தை நாங்கள் கடந்து விட்டோம். இந்த நான்கு வருஷத்தில் எங்கள் உடல் வளர்ச்சியிலும், மன வளர்ச்சியிலும் பல மாறுதல்கள் ஏற்பட்டு விட்டன. வனஜா என்னைக் காட்டிலும் ஒன்றரை வயது தான் சிறியவள். ஆயினும், அவள் அறிவில் இன்னும் சிறுமியாகவே இருந்தாள்.

என் பெற்றோர்களிடையே என் விவாகப்பேச்சுத் தான் பிரதானமாக இருந்தது. மாமா ஒன்றும் பிடி கொடுத்து எழுதாததால், 'நேரில் கேட்டு விட்டு வருவது' என்று தீர்மானித்து அம்மாவும் அப்பாவும் சென்னைக்குப் புறப்பட்டார்கள்.

அம்மா திரும்பி வரும் நாளை நான் அதிக ஆவலோடு எதிர்பார்த்தேன்; என் விவாகத்தைக் குறித்த நற்செய்திக்காக மட்டும் அல்ல; ராஜம் அம்மாஞ்சியைப் பற்றி அம்மா கொண்டுவரப்போகும் நற்செய்தியைக் கேட்கத்தான் அத்தனை ஆவல்.

அந்த நாளும் வந்தது; அம்மாவும் வந்தாள். ஆனால் என்ன ஏமாற்றம்! அம்மாவின் முகத்தில் களையேயில்லை! அழுதழுது அவள் கண்களும் சிவந்திருந்தன! முகம் கொடுத்து ஒருவரோடும் பேசவில்லை. வெட்கத்தாலும் பயத்தாலும் அம்மாவை நெருங்கி என்னால் எதுவுமே கேட்க முடியவில்லை. அதுவரை அம்மா அப்படி அழுது நான் பார்த்ததே யில்லை. அதனால் என் மனம் பட பட வென்று அடித்துக் கொண்டது.

"கண்ணான குழந்தை அவன். அவனுக்கா இப்படிப்பட்ட தீராத வியாதி வரவேண்டும்?" என்று விம்மினள் அம்மா.

"இரண்டு வருஷ காலமாகக் காட்டாத டாக்டர் பாக்கி இல்லையாமே; எல்லாரும் ஒரே மாதிரி, 'இது தீராத பெரிய வியாதி' என்று சொல்லி விட்டார்களாமே!" என்றார் அப்பா.

"என்னமோ, நம் குழந்தை அதிர்ஷ்டம் ஒரு வேளை அவனுக்குக் குணமானாலும்..." என்று அம்மா சொல்லி முடிக்கு முன், அப்பா குறுக்கிட்டு, "இதோடு விடு, அந்தப் பேச்சை!" என்று சீறினார்.



சித்திரகுப்தன் :—தர்மராஜா! பூலோகத்தில் உங்களைப் பற்றி ஒரே புகாரா யிருக்கிறது!

எமதர்மன் :—அப்படியா சமாசாரம்? நான் செத்துப்போன பிறகு என் வேலையை எவன் இதைவிட நன்றாகச் செய்யப் போகிறான், பார்த்து விடுகிறேன்!

விஷயம் ஒருவகையாக எங்களுக்கு விளங்கிற்று. ராஜம் அம்மாஞ்சியின் வலது குதிகாலில் ஏற்பட்ட ஆழமான புண், இரண்டு வருஷமாக எவ்வளவோ சிகிச்சை செய்தும் ஆறவில்லையாம். சதையையே அரித்துச் சாப்பிட்டுவிடும் அந்தப் பயங்கரமான வியாதியால் மனமுடைந்து விட்ட ராஜம் அம்மாஞ்சி தான் இனி ஒரு 'துறவி' என்றும், கல்யாணம் செய்துகொண்டு வீணாக ஒரு பெண்ணின் வாழ்க்கையைப் பாழாக்கப் போவதில்லை என்றும் சொல்லி விட்டானாம். இதைக் கேட்டு என் மனம் பட்டபாடு சொல்லி முடியாது.

பிறகு விஷயங்கள் வேறுவிதமாக முடிவு செய்யப்பட்டன. வேறு அம்மாஞ்சிக்கு என்னைக் கொடுத்து விவாகத்தை நடத்தி விடத் தீர்மானித்தார்கள். அதற்கான ஏற்பாடுகளும் துரிதமாக நடந்து கொண்டிருந்தன. விவாகத்தைச் சீக்கிரமே நடத்தி விட முனைந்து நின்றது. ராஜம் அம்மாஞ்சி தான் என்பதை அறிந்தபொழுது என் மனம் துன்ப மடைந்து தவித்தது. சின்ன வயது முதல் ஒன்றாக வளர்ந்து விட்ட பாசமோ, அல்லது ஆதிமுதல் பெரியவர்கள் பேச்சினால் ஏற்பட்ட தோஷமோ அறியேன். ராஜம் அம்மாஞ்சியை என்னால் ஒரு நிமிஷங்கூட மறக்கவும் முடியவில்லை; வேறு அம்மாஞ்சியுடன் நடத்தப் போகும் வாழ்க்கையைப் பற்றி என்னால் ஒரு நிமிஷங் கூட நினைத்துப் பார்க்கவும் முடியவில்லை!

விவாகத்திற் கென்று குறிக்கப்பட்ட நாளும் நெருங்கியது. மாப்பிள்ளை-அழைப்பு அன்று காலையிலேயே மாமா குடும்பத்துடன் வந்து விடுவதாகக் கடிதம் எழுதியிருந்தார். நான்கு வருஷங்களுக்குப் பிறகு அம்மாஞ்சிகளைக் காணப்போகும் ஆவலில் என் மனம் துள்ளியது.

"அத்தை!" என்ற அன்பான அழைப்புடன், முதலில் வந்து நுழைந்தது ராஜம் அம்மாஞ்சிதான். அற்புதமான வளர்ச்சியுடன், கம்பீரமாக நின்ற அவர் தோற்றத்தைக் கண்டு திகைத்துக் கற்சிலையானேன். களைசொட்டும் அவர் முகத்திலே சஞ்சலத்தின் சாயல்கூட வீசவில்லை. என் திகைப்புக் குறைந்ததும் அவருடைய காலைக் கூர்ந்து கவனித்தேன். காலைச் சுற்றிக் கட்டிய கட்டுக்குமேல் மூடிக்கொண்டிருந்த கருப்பு 'ஸ்லிப்பர்' என் கண்ணுக்கும் அவர் புண்ணுக்கும் இடையில் பெரும் திரையாக நின்றது. சிரித்து என்னை நோக்கிய அம்மாஞ்சி சற்றுநேரம் திகைத்து நின்று-

விட்டார். ஆனாலும் 'சட்'டென்று சமாளித்துக் கொண்டு, என்னுடன் பேசாமலே அப்பால் போய் விட்டார்.

கருத்தும், இளைத்தும் உருமாறி விட்ட எங்கள் அம்மாமி அப்படியே என் அம்மா மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு, "அக்கா, நீங்கள் கூடவா ராஜத்தைக் கைவிட்டு விட்டீர்கள்? மூத்த பிள்ளையைத் தனி மரமாக நிறுத்தி விட்டு, இளைய பிள்ளைக்குக் கலியாணம் செய்வது உண்டா, அக்கா?" என்று கேட்டுக் 'கோ' வென்று கதறி விட்டாள்.

"என்ன பண்ணி செய்வது? அவர் வேறு இடத்தில் சம்பந்தம் செய்ய வேண்டும் என்று சொல்லாமல் இந்த மட்டும் வேணுவுக்குக் கொடுக்கவாவது சம்மதித்தாரே! அதைக் கொண்டுதான் நாம் திருப்தி அடைய வேண்டும்" என்று அம்மா, அம்மாமியைத் தேற்ற முயன்றாள். என்ன தேற்றியும் அம்மாமிக்கு ஆறுதல் உண்டாகவே இல்லை.

"என்ன தான் சொல்லுங்கள், அக்கா! வேணுவின் அகமுடையாள் ராஜத்திற்கு சிச்ருஷை செய்ய முடியுமா? எனக்குப் பிறகு அவன் கதி என்ன?" என்று அம்மாமி மறுபடியும் தேம்பினாள்.

அம்மாமியின் அந்த வார்த்தைகள் கூரிய அம்புபோல் பாய்ந்து, என் உள்ளத்தைப் புண்ணாக்கி, உடலைச் சிலிர்க்கச் செய்தன. விவரிக்க இயலாத வேதனையால் மனம் நிலை கொள்ளாமல் தவித்தது.

மாப்பிள்ளை அழைப்புக்கான ஏற்பாடுகள் ஆரம்பமாயின. வீட்டிலுள்ள அத்தனை பேரும் மீனாக்ஷி அம்மன் கோவிலை நோக்கிப் புறப்பட்டுப் போய் விட்டார்கள். நான் மெதுவாக வெளியில் வந்து மகிழ மரத்தடியில் உட்கார்ந்தேன். அந்த மரத்தின் குளுமையில் மனதைத் தேற்றிக் கொள்ள முயன்றேன்.

நான்கு வருஷத்திற்கு முன் முகத்தில் ஆனந்தம் பொங்க அம்மாஞ்சி சொன்ன அந்த வார்த்தைகள் இன்னும் என் மனதில் புதுமை மாறாமலே நின்றன. சற்று முன் அம்மாமி சொன்ன அந்த அம்பு போன்ற வார்த்தைகளும் என் மனதைக் குடைந்து புண்ணாக்கின. ஒரு பெருமூச்சுடன் கண்களை இறுக மூடிக் கொண்டேன். சற்று நேரத்திற்குள் மேளச் சப்தம் பக்கத்தை நெருங்கி விட்டது. சமூகத்தில் மாலையுடன் நானும் அம்மாஞ்சி பவனி வரவேண்டிய அந்த மாப்பிள்ளை




"இவரைத் தெரியாதா? சீமன்னபுரம் கடோத்கஜ பாகவதர். சங்கீதத்திலே அசுர சாதகம் பண்ணினவர்."

அழைப்பில், வேறு அம்மாஞ்சியைப் பார்க்க என் மனம் கூசியது. சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தவளாய் எழுந்து உள்ளே நுழைந்தேன். கோவிலுக்குச் செல்லாமல் கூடத்தில் படுத்திருக்கும் அம்மாமியின் கண்ணீர்ப் பிரவாகத்தைக் கண்டபின் என் தீர்மானம் இரும்புபோல் வலுப்பெற்றது.

மாப்பிள்ளை பவனி முடிந்து, நிச்சயதார்த்தத்திற்கான ஏற்பாடுகள் ஆரம்பமாயின. "அம்மா, குழந்தை!" என்று குரல் கொடுத்தார் அப்பா. வேகமாக உள்ளே வந்த அம்மா, "ஏனம்மா நிற்கிறாய்? வா கூடத்திற்கு; மணையில் உட்காரு" என்றாள். நான் தைரியமாக, "அம்மா, சற்று அப்பாவை இங்கே வரச் சொல்லு!" என்றேன். அம்மா சற்று விழித்து விட்டுப் போய் அப்பாவை அனுப்பினாள்.

சற்று நேரத்துக்குள் அப்பாவும் வந்தார். எவ்வளவோ தைரியமாகத்தான் இருந்தேன். கோபக்காரரான அப்பாவை நேருக்கு நேராகக் கண்டதும் என் தைரியமெல்லாம் எங்கோ மறைந்து விட்டது. கைகளில் முகத்தைப் புதைத்துக் கொண்டு, தேம்பித் தேம்பி அழுதுவிட்டேன். பதறிப் போன அப்பா என் முகத்தை நிமிர்த்தி, "ஏனம்மா? என்ன நடந்து விட்டது?" என்றார்.

"நானும் அம்மாஞ்சியையே நான் கலியாணம் செய்து கொள்ளுகிறேன், அப்பா!"

ஜோஸ்யம் பலித்தது!

இரண்டு வேளை சாப்பாடு உனக்கு நிச்சயம் கிடைக்கும்!

—சாமா—

என்று விக்கலுக்கும் விம்மலுக்கும் இடையே எப்படியோ சொல்லிவிட்டேன்.

திகைத்துப் போன அப்பா சற்று நேரம் வரை பேசவில்லை. பிறகு, "குழந்தையான உனக்கு என்னம்மா தெரியும்? அசடு! போய் முகத்தை அலம்பிக்கொண்டு வந்து மனையில் உட்காரு!" என்றார் கண்டிப்பான குரலில்.

நான் சட்டென்று நிமிர்ந்து, "முடியாது அப்பா! நான் தீர்மானித்து விட்டேன்!" என்றேன் பிடிவாதமாக.

"தீர்மானமா? அதிகப்பிரசங்கி!" என்று ஆரம்பித்த அப்பா சட்டென்று தம் குரலைத் தாழ்த்தி, "ஆயுள் முழுதும் தீராத வியாதியோடு கஷ்டப்படப்போகும் அவனிடம் நீ என்ன சுகத்தைக் காணமுடியும் என்று நினைக்கிறாய்?" என்று பல்லைக் கடித்தார்.

நான் சற்றும் தளராமலே, திடமான குரலில், "வேணு அம்மாஞ்சியை மணந்தால் மட்டும் சுகத்தைக் கண்டு விடுவேன் என்று நினைக்கிறீர்களா, அப்பா? அது ஒரு நாளும் இல்லை. என் வாழ்வில் சுகத்தைக் காணும் பாக்கியம் இருக்குமானால், நானும் அம்மாஞ்சியை மணப்பதால் மட்டும் அது மறைந்து விடாது. விவாகத்திற்குப் பின் அம்மாஞ்சிக்கு இந்த வியாதி வந்திருந்தால் என்ன செய்வோம்?" என்றேன்.

உதட்டைக் கடித்துக் கொண்ட அப்பா பிறகு எதுவுமே பேசவில்லை. "ஏன் என்ன தாமதம், மாப்பிள்ளை?" என்று கேட்டுக் கொண்டே வந்த மாமா, அப்பா மூலம் விஷயத்தை அறிந்து வியப்புடன் என் முகத்தை உற்று நோக்கினார். பிறகு அவர் ஏதோ தீர்மானித்தவராய் வேகமாக வெளியே சென்று, நாணும் அம்மாஞ்சியைக் கைப்பிடியாக அழைத்து வந்து என் முன் நிறுத்தி, "நீயே சொல்லுடா அவனுக்கு" என்றார். அது வரை அசையாமல் நின்ற அப்பா ஒரு பெருமூச்சுடன், "மாப்பிள்ளையாக அழைக்கப்பட்ட வேணு ..?" என்று வார்த்தையை முடிக்காமலே நிறுத்தினார்.

"அவருக்கு உஷாவைக் கொடுத்து இரு கலியாணங்களையும் சேர்த்தே நடத்தி விடுங்கள்" என்றேன் நான் அழுத்தமாக. அதன் பிறகு அப்பா அங்கு நிற்க முடியாமல், மாமாவின் கையைப் பிடித்துக் கொண்டு வெளியேறினார்.

கற்சிலைபோல் நின்ற அம்மாஞ்சியின் முகத்தை எதிர்த்து நோக்கினேன். அவருடைய பரந்த விழிகளில் நீர் துளித்தது. கெஞ்சும் குரலில், "பத்மஜா! எனக்காக

என் அன்புக்காக, உன் தீர்மானத்தை நீ மாற்றிக் கொள்ளத்தான் வேண்டும். 'தீராத வியாதிக்காரனுடைய மனைவி; அவனுடைய குழந்தைகள்' என்று உலகம் அருவருக்கும்படியான பாபத்தைச் செய்ய நான் விரும்பவில்லை. நீயும் விரும்ப மாட்டாய். ஆகையால் என்னை மன்னித்து விடு" என்றார்.

"தீராத வியாதியும் தீரலாம். நான் என் தீர்மானத்தை மாற்றமாட்டேன்" என்றேன் நான்.

"பத்மஜா, ஏன் இப்படிப் பிடிவாதம் பிடிக்கிறாய்! என் வியாதியும் தீராது; உன் வாழ்வும் பாழாகிவிடும்" என்றார் அவர் கோபமாக.

என் மனதில் குமுறி எழுந்தது துக்கம்; கண்ணீர் பொங்கி வழிந்தது; வார்த்தைகளைக் கொட்டத் துடித்தன உதடுகள். "அம்மாஞ்சி, தங்கள் வாழ்வு பாழாகும் போது என் வாழ்வும் பாழாகட்டும்" என்று நிறுத்தினேன். என் குரல் கம்மியது.

அவர் சிறிது நேரம் வரை பேசவில்லை. அவருடைய கண்ணிமைகளும் கண்ணீரால் நனைந்தன. நிமிர்ந்து என் முகத்தைக் கூர்ந்து நோக்கினார். "பத்மஜா! விதியை நீயாகவே தேடிக் கொள்ளுகிறாய்!" என்று சொல்லி விட்டுப் போனார்.

மணவறையில் நான்கு மனைகள் போட்டு, இரண்டு குத்து விளக்குகளை ஏற்றிவைத்து சுறுசுறுப்புடன் அலங்கரித்தாள் அம்மாமி. ராஜும் அம்மாஞ்சிக்கு நானும், வேணு அம்மாஞ்சிக்கு வனஜாவும் என்று நிச்சயிக்கப்பட்டு, நிச்சயதார்த்த முகூர்த்தமும் நடந்தேறியது.

அம்மாஞ்சியின் கையைப் பற்றி, அக்கினி வலம் வந்து, அம்மி மிதித்து, அருந்ததி பார்த்து அவர் தம் மனைவி யானேன். நலங்கு, ஊஞ்சல் முதலான விளையாட்டுக்களில் என் அம்மாஞ்சி கலந்து கொள்ள மறுத்து விட்டார். 'இந்த மட்டும் கல்யாணத்திற்காவது சம்மதித்தாரே!' என்று நினைத்த பெரியவர்கள், வேறு எதற்கும் அவரை வற்புறுத்தவில்லை. வேணு அம்மாஞ்சியும், வனஜாவும் உற்சாகமாக நலங்கில் விளையாடினார்கள். நானும் அதைக் கண்டு மகிழ்ந்தேன். விவாகமும் அதையொட்டிய வைபவங்களும் முடிவடைந்தன.

வயோதிக காலத்தில் தாத்தாவையும் பாட்டியையும் தனியாக விடுவது தவறு என்று எண்ணிய என் பெற்றோர்களும், என் கணவருடைய பெற்றோர்களும் தாத்தாவையும் பாட்டியையும் அழைத்துக்



அப்பா :—என்டா ராமு! இன்றைக்கு உன் கணக்குகளை நான் போட்டுக் கொடுத்தது உபாத்தியாயருக்குத் தெரிந்துவிட்டதா?

அம்பி :—தெரிந்துவிட்டது போலத்தான் தோன்றுகிறது! வாத்தியார் என் கணக்கைப் பார்த்து விட்டு, 'நீ ஒருத்தனேயா இத்தனை தப்புகள் போட்டாய்?' என்று கேட்டார்.

கொண்டு கிராமத்திற்குப் போகத் தீர்மானித்தார்கள். மதுரை பங்களாவில் நாங்களும், சென்னை பங்களாவில் வேணு தம்பதிகளும் இருப்பதென்றும் முடிவாகி அப்படியே இருக்கவும் ஆரம்பித்தோம்.

கலியாணத்திற்குப் பிறகு அம்மாஞ்சியிடம் கொஞ்ச நஞ்ச மிருந்த உற்சாகமும் மறைந்து விட்டது. பித்துப் பிடித்தாற் போல் உட்கார்ந்து, புஸ்தகங்களில் மூழ்கித் தம்மையும், உலகையும் மறக்க முயன்றார். ஒரு நாள் அவராகவே சொன்னார். "பத்மஜா, இனி என்னால் இப்படியே காலம் கழிக்க முடியாது. இப்படியே இருந்தால் பைத்தியமும் பிடித்து விடும். எனக்கு ஏதாவது வேலை கொடு. பொழுதை உற்சாகமாகக் கழிப்பதற்கு ஏதாவது மார்க்கமிருந்தால் சொல்லு" என்றார். எனக்கு ஒன்றும் தென்படவில்லை. பின்பு அவரே "பக்கத்துக் குடிசையில் நடக்கும் திண்ணைப் பள்ளிக் கூடத்தை நம் பங்களாவுக்குள் நடத்தச் சொன்னால் என்ன?" என்றார்.

அவரது மனோபீஷ்டத்தைப் புரிந்து கொண்ட நான் உடனே அதற்கான ஏற்பாடுகளைச் செய்தேன்.

சீக்கிரமே மகிழ மரத்தடியை அழகான 'குருகுலம்' ஒன்று அலங்கரித்தது.

(அடுத்த இதழில் முடியும்)

# நடிகரும் ரஸிகரும்


நமஸ்காரம், சாயந்திரம் நம்ம டிராமாவுக்கு நீங்க வரலியா, ஸார்?
டிராமாவா? பேஷ்! எனக்குத் தெரியவே தெரியாதே? ஆமா, டிராமா எங்கே?


எங்கேயா? எல்லாம் நம்ப 'கிளப்'லே தான், ஸார்! சமூக நாடகம்-ரொம்ப நன்னாயிருக்குமே!
பேஷ், பேஷ், நம்ம 'கிளப்'லேயா?... ஆமா, யார் யார் வேஷம்?


நம்ம கோவிந்துதான் ராஜா பார்ட் வேஷம் போட்டுக்கிறான்..!
என்ன, நம்ப கோவிந்துவா? அவன் பாட்டு 'ஒன்'லே போதுமே! அடாடா...!


அப்புறம், நம்ம நாணு தான் காமிக் பார்ட்! நம்ப ஸெலக்ஷன்ஸ் எப்படி?
பலே! நாணு வேற இருக்கானா? அப்போ அவசியம் வந்து-தான் ஆகணும்...


நாடகம் கச்சிதமா ரெண்டே ரெண்டு மணி நேரந்தான். நடுவிலே சின்ன 'டான்ஸ்' வேற ஏற்பாடு செய்து இருக்கேன்!
இன்னிக்கு எந்த வேலை எப்படி யிருந்தாலும் டிராமாவுக்கு நான் நிச்சயமா வரத்-தீர்மானிச்சுட்டேன். ஆமா! யார் ஸ்திரீ பார்ட்?


கேட்பானேன், நான்தான் ஸ்திரீ பார்ட் வேஷம் போட்டுக்கிறேன்.
??
ஓஹோ!..சரி... பார்க்கலாம்; வர முடிஞ்சா நான் வரேன்!

# கண்ணாயிரமும் இரண்டாயிரமும்

வி. எஸ். ஸ்ரீனிவாஸன்

'சின்னச் சந்தை—லஞ்சம்' இவைகளை ஒழிப்பதற்காக ஆரம்பிக்கப்பட்ட இலாகாவில் கான்ஸ்டபிள் கண்ணாயிரம் வேலையை ஒப்புக் கொண்டது முதல், அவனும் ஹெட் கான்ஸ்டபிள் வீராசாமி நாயுடுவும் கீரியும் பாம்பும் போல் ஆனார்கள். முன்பே அவர்களுக்குள் இருந்த மனஸ்தாபம் இப்போது வளர்ந்து, ஒருவரை ஒருவர் 'அமுக்க' சமய சந்தர்ப்பங்களை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அப்போது தான் கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தது போல், கண்ணாயிரத்துக்கு ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது!

கச்சேரிக்குள் நுழைந்த கண்ணாயிரம் தன் தொப்பியைக் கழற்றி மேஜைமீது வைத்துவிட்டுத் தன் ஆசனத்தில் அமர்ந்ததும், அடுத்த அறையில் ஹெட் கான்ஸ்டபிள் வீராசாமி நாயுடு யாருடனோ பேசிக் கொண்டிருப்பது அவன் காதில் விழுந்தது. மறு நிமிஷம் 'ஹெட்'டின் சில வார்த்தைகள் கண்ணாயிரத்தை ஒரேயடியாகக் குலுங்கச் செய்தன!

"இங்கே பாருங்க, கடைசியாகச் சொல்லிப்பிட்டேன்! இரண்டாயிரத்துக்குத் தம்பிடி குறைந்தாலும் காரியம் முடியாது!" என்று வீராசாமி நாயுடு கூறினார்.

"சரி, நாளைக்கே இரண்டாயிரத்தையும் இங்கேயே கொண்டு வந்து கொடுத்துவிடுகிறேன்; வர மாதத்திலேயே விஷயத்தை முடிச்சுவிடணும். இது முடிந்த பின்தான் எனக்குத் தூக்கம் வரும்" என்று பழக்கமான குரல் ஒன்று பதிலளித்தது.

கண்ணாயிரத்தின் பிரமிப்பும் திகைப்பும் நீங்குமுன், வீராசாமி நாயுடுவின் அறையிலிருந்து பலசரக்குக் கடை பங்காரு நாயுடு வெளியேறினார்!

பங்காரு நாயுடு யுத்தகாலத்தில் பணக்காரர்களான பலரில் ஒருவர். அவருடைய பெயரையும் 'பிளாக் மார்க்கட்'டையும் பிணைத்து ஊரில் அனைவரும் வம்பளந்தார்களே தவிர, அவரைக் கையும் களவுமாகப் பிடிக்க ஒருவரும் முயலவில்லை!



ஹெட்கான்ஸ்டபிள் நாளை பங்காரு நாயுடுவிடமிருந்து பணம் வாங்கப் போவதை, இன்ஸ்பெக்டரிடம் சொல்லி வஞ்சம் தீர்த்துக் கொள்ள முடிவு செய்தான் கண்ணாயிரம்.

அடுத்த நாள் காலை பத்து மணி அடித்ததும் வீராசாமி நாயுடுவின் அறைக்குள் ஸ்ரீமான் பங்காரு நாயுடு நுழைந்தார்.

"இந்தாங்க, நேற்றுச் சொன்னபடி ரூபாய் இரண்டாயிரமும் இதோ இருக்கிறது! நன்றாக எண்ணிப் பார்த்துக் கொள்ளுங்கள்!" என்று சொல்லி, கரன்ஸி நோட்டுக்களை வீராசாமி நாயுடுவிடம் கொடுத்தார்.

அடுத்த நிமிஷம் வெளியிலிருந்து ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டரும் கண்ணாயிரமும் உள்ளே நுழைந்தனர். ஹெட் கான்ஸ்டபிளின் கையில் நோட்டுக்களைக் கண்டதும் இன்ஸ்பெக்டருக்குக் கோபமும் கண்ணாயிரத்துக்குச் சந்தோஷமும் உண்டாயிற்று!

"என்ன நாயுடுகாரு, எத்தனை நாளாக இந்தப் பிழைப்பு?" என்ற இன்ஸ்பெக்டரின் கேள்விக்குப் பதிலளிக்க முடியாமல் பிரமித்து மௌனமாய் நின்றார் ஹெட்கான்ஸ்டபிள்.

"இந்தப் பணத்தை இவரிடமிருந்து எதுக்காக வாங்கினீங்கன்னு எஜமான் கேட்கிறாரு?" என்றான் கண்ணாயிரம்.

விஷயம் புரிந்த ஹெட்கான்ஸ்டபிள் 'குபீ'ரென்று சிரித்தார்!

"அட ராமா! இவர் பெண்ணை என் மகன் சின்னத் தம்பிக்குக் கலியாணம் பேசி முடித்திருக்கிறேன். அடுத்த மாதம் முகூர்த்தம். அதற்கு வரதட்சணையாகக் கொடுத்ததுதான் இந்தப் பணம்!" என்று சொல்லிவிட்டு, மறுபடியும் சிரிக்க ஆரம்பித்தார் வீராசாமி நாயுடு.

இன்ஸ்பெக்டரின் பார்வை கண்ணாயிரம் நின்ற இடத்துக்குத் திரும்பியது. அங்கே அதுவரை நின்று கொண்டிருக்க அவனுக்கு என்ன, பயித்தியமா?

## “மெலிந்து நரம்புத் தளர்ச்சியினால் அதிர்ச்சியுற்றது நான்தான்.”

**இப்போது மறுபடியும் சுக சௌக்யமா யிருக்கிறேன் — படித்துப் பாருங்கள் ஏனென்று!**

“எப்போதிலிருந்து நான் எடை குறைந்து மெலிந்திருக்கிறேன் என்பது நினைவிலிருக்கிறது. இப்போது எனக்கு 34 வயதுதான். இதற்குள் இருமுறை கோரமான நரம்பு அதிர்ச்சிகள் உண்டாயின. மெலிந்து, நரம்புத் தளர்ச்சியினால் விடு விடுப்பும் அதிர்ச்சியும் கொண்டவன் நான்தான். “இனிமேல் வேறெதுவும் என்னைக் காப்பாற்றப் போவதில்லை” என்ற அளவுக்கு உயர்ந்த மருந்துகளையும் சாப்பிட்டும் பயனில்லையென்றால் மேலும் என்ன நான் செய்வது? பிறகு கால் பந்தாட்டமே தொழிலாகக் கொண்ட என் சகோதரர் விக்கல்பை உபயோகிக்க யோசனை கூறினார். அப்படியே உபயோகித்தேன். இப்போது, கடந்த மூன்று வாரங்களாக நரம்பு அதிர்ச்சி போன இடம் தெரியவில்லை. நன்றாக சாப்பிடுகிறேன். நன்றாகத் தூங்குகிறேன். நேற்றைய தினம் என்னையே எடைபோட்டுப் பார்த்தேன். எட்டே முக்கால் பவுண்டு ஏறியிருந்தேன். எப்போதையும்விட இப்போது சுகமாயும் சௌக்யமாயும் இருக்கிறேன்.”

ஐ. ஜி. பி., பிரிஸ்டல், இங்கிலாந்து
அத்தாட்சி நெ. 7781

உலகெங்கிலிருந்தும் எமக்கு ஸ்திரமாக வந்து கொண்டிருக்கும் ஆயிரக்கணக்கான கடிதங்களில் இது ஒன்று.

தேக ஆரோக்கியத்தை விருத்தி செய்யும் 9 தாதுக்களுடன் விடாமின் B1-ம் D-யும் சேர்க்கப்பட்ட திடப் பொருள்தான் விக்கல்ப். உங்கள் தேகத்திற்கு ஒவ்வொரு நாளும் இவை மிகவும் தேவை. விக்கல்ப்பில் மருந்துப் பொருள்கள் கிடையாது. குழந்தைகளும் உட்கொள்ளலாம். விக்கல்ப்பில் தாதுப் பொருள்களோடு மூலிகைப் பொருள்கள் மட்டுமே அடங்கியிருக்கின்றன. கைபடாதது. உலகில் விக்கல்ப்பை உபயோகித்த லக்ஷக்கணக்கான மக்கள் மீண்டும் ஆரோக்கியத்தையும் சந்தோஷத்தையும் அடைகிறார்கள்.

இன்றே உபயோகித்துப் பாருங்கள். எவ்வளவு தூரம் குணமடைந்த சோபையுடன் வாழ்க்கையில் குதூகலமடைகிறீர்கள் என்பதை உணர்வீர்கள். எல்லா ஸ்டோர்களிலும் கடைகளிலும் கிடைக்கும்.

**இது ஒரு டானிக் மட்டுமல்ல**
**ஒரு உணவுப் பொருள்கூட**

V 62

## அமெரிக்கன் மாடல் ரிவால்வர்

### லைசென்ஸ் வேண்டியதில்லை




உங்கள் உயிரையும், சொத்தையும், மானத்தையும், திருடர்கள், விலங்குகளின் தாக்குதல்களிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

வீட்டிலும், பிரயாணம் செய்கையிலும் இந்த அழகிய உறுதியான ரிவால்வர் உங்களுக்குச் சிறந்த, நம்பகமான நண்பனாக விளங்கும். ஒன்றன்பின் ஒன்றாக தானே 6 தரம் சுடுவதற்கு 6 அறைகள் பொருந்திய இது, அசல் அமெரிக்கன் பிஸ்டல்களுக்குச் சமமானது. 15 அவுன்ஸ் கனமும், 9 அங்குல நீளமும் உள்ள இது நெருப்பைக் கக்கிக்கொண்டு பயங்கர சப்தத்துடன் வெடிக்கிறது. இன்றே இதில் ஒன்றுக்கு ஆர்டர் கொடுங்கள். குறைந்த விலையுள்ள இந்த மெய்க்காப்பாளன் இன்றி ஒரு நாளும் இருக்காதீர்கள்.

ரகம் நெ. 222 ரூ. 6/8
„ 333 ரூ. 7/8
„ 444 ரூ. 8/8

மேல்கொண்டு 4 டஜன் ரவைகள் விலை ரூ. 4/-. ரிவால்வர் உறை கொண்ட தோல் பெல்ட் ஒன்றின் விலை ரூ. 5/- லூப்ரிகேடிங் ஆயில் ஒரு பாட்டில் விலை ரூ. 1/- கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள்.

**WILSON TRADING CORPORATION**
P. B. 247, CAWNPORE (U. P.)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press: *116-119*, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. NO. M. 4392